# பெருந்தலைவரின் அடிச்சுவட்டில்...

(தமிழகத்தின் பொற்காலம் உள்ளிட்ட
கட்டுரைகளின் தொகுப்பு)



முனைவர் க. ஜான்குமார்
முனைவர் நா. சேதுராமன்

# பெருந்தலைவரின் அடிச்சுவட்டில்

(தமிழகத்தின் பொற்காலம் உள்ளிட்ட கட்டுரைகளின் தொகுப்பு)

முனைவர் க. ஜான்குமார்

முனைவர் நா. சேதுராமன்

வெளியீடு

காமராஜ் பவுண்டேசன் அஃப் இந்தியா

2019



*ஆசிரியர்கள்*

முனைவர் **க. ஜான்குமார்,**
திருச்சிராப்பள்ளி
அலைபேசி - 9443764536
மின்னஞ்சல்: johnkumark@gmail.com

முனைவர் **நா. சேதுராமன்,**
கடலூர்
அலைபேசி - 9865381281
மின்னஞ்சல்: drnsethuraman@gmail.com

அச்சாக்கம்
**தி பிரிண்டிங் ஹவுஸ்,**
திருச்சி.
அலைபேசி - 94435 87233

# பொருளடக்கம்

# தேச விடுதலையில் தமிழகம் வளர்க்க வேண்டிய தேசியம்

முனைவர் **நா. சேதுராமன்**

இந்தியா. தேசம், தேசியம் குறித்துச் சிந்திக்கின்ற, எழுதுகின்ற உலகச் சிந்தனையாளர்களுக்கு, குறிப்பாக மேற்கத்தியச் சிந்தனையாளர்களுக்கு ஒரு அளவில்லா ஆச்சரியம். ஆம்! எது மாதிரியும் இல்லாத புதுமாதிரியான தேசம் இது. குறிப்பிட்ட சமூகமானது, ஒரு பொதுவான மொழி, கலாச்சாரம், இனம், வம்சாவளி அல்லது வரலாற்றைப் பகிர்ந்துகொள்ளும் போது ஒரு தேசம் உருவாவதற்கான வாய்ப்புகளும் உருவாகின்றன என்பது மேற்கத்தியச் சிந்தனையாளர்கள் பொதுவாக முன்வைக்கின்ற வாதம் அல்லது வரையறை ஆகும்.

இந்திய தேசத்தின் எல்லைகள் முழுமைக்கும் பரந்து வாழுகின்ற இந்த மக்கள் பேசுகின்ற மொழிகள் பல, கடைப்பிடிக்கும் கலாச்சாரங்கள் கணக்கற்றவை, இனங்கள் எண்ணிலடங்காதவை, வரலாறு பரந்துபட்டது. மொத்தத்தில் மேற்கத்தியச் சிந்தனையாளர்களின் பார்வையில், இது ஒரு தேசமாக இருப்பதற்கான எந்தவிதச் சாத்தியக்கூறுகளும் இல்லவே இல்லை. ஆயினும் இந்தியா ஒரு தேசமாக, சுதந்திர தேசமாக, அறுபது ஆண்டுகளைக் கடந்தும், கம்பீரமாக நிமிர்ந்து நிற்கிறது. வேற்றுமையில் ஒற்றுமை காண்கின்ற அதிசயம் நிகழ்கிறது.

ஆயினும், தேசம், தேசியம் என்ற எண்ணங்கள் இங்கு தளிர்விடத் துவங்கியபோதே, காலனியாதிக்க ஆட்சியாளர்களின் கைங்கர்யத்தில் அதன் வேருக்கு விஷம் வைக்கும் வேலைகளும் ஆரம்பமாயின. இந்தியாவில் ஆதிக்கம் செலுத்தத் துவங்கிய ஆங்கிலேயர்கள், “இந்தியர்கள் தங்களைத் தாங்களே தாழ்வானவர்களாக உணரவைக்காவிட்டால், அவர்களுக்குள் சாதி, மத, இன ரீதியிலான பிரிவினைகளை ஏற்படுத்தாவிட்டால், தங்களது ஆதிக்கம் இந்தியாவில் நீடித்திருக்கச் சாத்தியமேயில்லை” என்பதை உணர்ந்தனர். அதற்காக சாதி ரீதியாக, மத ரீதியாக, இன ரீதியாகப் பிரிவினைக் கோட்பாடுகளைக் கட்டவிழ்த்துவிடத் துவங்கினர்.

இந்திய சுதந்திரப் போராட்டம் என்பது வேறு ஒரு கண்ணோட்டத்தில் பார்த்தால், இந்திய சுதந்திரத்திற்காகவும், இந்திய மக்களின் மனதில் தேசிய உணர்வைக் கிளர்ந்தெளச் செய்வதற்காகவும் பாடுபட்ட சக்திகளுக்கும், காலனியாதிக்கவாதிகளின் பிரித்தாளும் சூழ்ச்சிக்குத் துணை நின்று மக்களின் மனதில் பிரிவினைவாதத்தை வளர்க்க முயன்று, இந்திய சுதந்திரத்திற்கு எதிராக நின்ற சக்திகளுக்கும் இடையினாலான போராட்டம் ஆகும்.

வணிகர்களாக இங்கு வந்த ஆங்கிலேயர்கள் மெதுவாகத் தங்களின் வல்லமையை நிலைநாட்டினர். பிற ஐரோப்பியப் போட்டியாளர்களை

வளரவிடாமல் செய்தனர். வரிவசூல் செய்யத் துவங்கி ஆட்சியாளர்களாக உருமாறிய அவர்கள் படைவலிமையைக் காண்பித்தும், வஞ்சகமான சூழ்ச்சிகள் பலசெய்தும் ஒவ்வொரு பகுதிகளாகத் தங்களின் ஆட்சி அதிகாரத்திற்குள் கொண்டு வந்தனர். காலப்போக்கில் இந்தியத் துணைக்கண்டத்தின் பெரும்பாலான பகுதிகள் அவர்களின் கட்டுப்பாட்டில் வந்தன. சுதேச மன்னர்கள் அனைவரும் அவர்களின் சொல்லுக்குக் கட்டுப்பட்டவர்களாக ஆக்கப்பட்டனர்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவில் மெல்ல மெல்லக் காலூன்றிய அதேவேகத்தில், அதேநேரத்தில், அவர்களை இந்த மண்ணிலிருந்து அப்புறப்படுத்த வேண்டும் என்ற எதிர்ப்பும் வளர்ந்தது. அந்த எதிர்ப்புணர்வின் முதல் குரல் தமிழகத்தின் தென்கோடி முனையிலிருந்து கேட்டது. அக்குரலுக்குச் சொந்தக்காரரான பூலித்தேவனிடம் தான் ஆங்கிலேயர்கள் தங்களின் முதல் தோல்வியை 1755-ம் ஆண்டு சந்தித்தனர். வரிகட்ட மறுத்த அவர் நெற்கட்டும் செவ்வலை, நெற்கட்டான் செவல் என மாற்றினார்.

வரியை உயர்த்தி, ஊர் ஊராக அலையவைத்து அலைக்கழித்த ஆங்கிலேயர்களுக்கு எதிராக வீரபாண்டியக் கட்டபொம்மனும் கிளர்ந்தெழுந்தான், உற்ற துணையாக ஊமைத்துரையும் இருந்தான். அந்நியர்களுக்கு அடங்க மறுத்த கட்டபொம்மன், தூக்குக்கயிறு நோக்கிச் சொல்லும் போது, தன் இருபுறமும் நின்ற பாளையக்காரர்களை அலட்சியமாகப் பார்த்துக்கொண்டே வீர நடைபோட்டுச் சென்றதை ஆங்கிலேயத் தளபதி பானர்மேன் தன் வார்த்தைகளாலேயே பதிவு செய்திருக்கிறார்.

வட இந்தியாவிலே ஜான்சி ராணி லட்சுமிபாய் என்றால், அதற்கும் முன்பாக அந்நியர்களைப் போர்க்களத்திலே சந்தித்த வீரப்பெண்மணி சிவகங்கையின் வேலுநாச்சியார். அவர்வழி நின்று போராடிய மருது சகோதரர்கள் அனைத்துப் பாளையக்காரர்களையும் ஒன்றுதிரட்டி தென்னிந்தியக் கூட்டமைப்பை உருவாக்கியதோடு அல்லாமல், ஆங்கிலேயர்களுக்கு எதிரான வரலாற்றுச் சிறப்புமிக்க புரட்சிப் பிரகடனத்தை திருச்சி மலைக்கோட்டையின் சுவற்றிலும், ஸ்ரீரங்கம் கோயில் சுவற்றிலும் ஒட்டினர்.

வட இந்தியாவிலே 1857-ம் ஆண்டு ஆங்கிலேயர்களுக்கு எதிராக சிப்பாய்கள் கிளர்ந்தெழுந்தனர் என்றால், அதற்கும் முன்பாக 1806-ம் ஆண்டிலேயே வேலூரின் சிப்பாய்கள் தங்களின் உணர்வுகள் உதாசீனப்படுத்தப் பட்டதைக் கண்டு வேகம் கொண்டு எழுந்தனர். மாவீரன் திப்புவின் மகனைத் தங்களின் மன்னனாக ஆக்கிவிட முயன்றனர்.

1857-ம் ஆண்டு நடந்த கிளர்ச்சியை வெறும் சிப்பாய்க் கலகம் என்று மட்டுமே கூறிவிட முடியாது என்பதனை வரலாற்றாய்வாளர்கள் வலியுறுத்துகின்றனர். ஏனெனில், கிட்டத்தட்ட இந்தியா முழுவதுமே ஆங்கிலேயர்களுக்கு எதிராகக்

கிளர்ந்தெழுந்தது. முகலாய மன்னர் இரண்டாம் பகதூர்ஷாவை இந்தியாவின் மன்னராகப் பிரகடனப்படுத்த சிப்பாய்கள் மேற்கொண்ட முயற்சிகளுக்குப் பொதுமக்களும் அமோக ஆதரவளித்தனர். ஆனால், இந்தப் பெருங்கலகம் இந்தியாவின் ஆட்சியைக் கிழக்கிந்தியக் கம்பெனியின் கைகளில் இருந்து, ஆங்கிலேய முடியாட்சியின் கீழ் நேரடியாகக் கொண்டு சென்றது.

அதன்பிறகு ஆங்கிலேயர்களுக்கு எதிராக ஆயுதமேந்திப் போராடி வந்த இந்தியர்கள் தங்களின் அணுகுமுறையை மாற்றிக் கொண்டனர். ஆங்கிலக் கல்விபெற்ற அவர்கள் உரிமை உணர்வும், சுதந்திர வேட்கையும் கொண்டு அரசியல் சார்ந்த அமைப்புகளை ஏற்படுத்தினர். சென்னை சுதேசி சங்கமும், சென்னை மகாஜன சபையும் அத்தகைய அமைப்புகளுக்கு முன்னோடிகளாக அமைந்தன.

ஆங்கிலேயர்களை இந்திய மண்ணைவிட்டு அகற்ற அயராது பாடுபட்ட இந்திய தேசியக் காங்கிரஸை ஒரு ஆங்கிலேயரே உருவாக்கிய அதிசயமும் 1885ஆம் ஆண்டு நடந்தது. ஆட்சியாளர்களிடம் அன்போடு வேண்டி விண்ணப்பம் அளிக்கும் அமைப்பாக உருவான அதன் தன்மை 1907-ம் ஆண்டிற்குப் பிறகு மாறியது. கோபாலகிருஷ்ண கோகலேயின் பின்னால் அணிதிரண்ட தமிழகத்தைச் சேர்ந்த ஜி.ஏ. நடேசன், சிவகாமி ஐய்யர் உள்ளிட்டோர் மிதவாதிகள் என்றும், பாலகங்காதர திலகரின் அன்புக்குக் கட்டுப்பட்ட தமிழகத்தைச் சேர்ந்த வ.உ. சிதம்பரம் பிள்ளை, மகாகவி பாரதியார் உள்ளிட்டோர் தீவிரவாதிகள் என்றும் அழைக்கப்பட்டாலும், ஆங்கிலேயர்களுக்கு எதிரான உணர்வில் அனைவரும் ஒன்றுபட்டு இருந்தனர்.

மிதவாதம், தீவிரவாதம் இரண்டையும் தாண்டி, துப்பாக்கி முனையில்தான் ஆங்கிலேயரை வீழ்த்த முடியும் என்ற உணர்வுகொண்ட பயங்கரவாதிகளும் இங்கு உருவாயினர். வ.வே.சு. ஐய்யரும், நீலகண்ட பிரம்மச்சாரியும், எம்.பி.டி. ஆச்சாரியாவும் அதில் குறிப்பிடத்தக்கவர்கள். வ.வே.சு. ஐய்யரிடம் துப்பாக்கி சுடும் பயிற்சி பெற்ற வாஞ்சிநாதன் நெல்லை மாவட்டக் கலெக்டர் ராபர்ட் வில்லியம் ஆஷ்-ஐ 1911-ம் ஆண்டு மணியாச்சியில் சுட்டுக் கொன்றுவிட்டு தன்னையும் சுட்டுக் கொண்டார். தன்னுயிர் போகும் தறுவாயிலும் தாய் நாட்டின் கொடியை தரையில் வீழாமல் காத்த திருப்பூர் குமரன் உள்ளிட்ட எண்ணற்ற தியாகசீலர்கள் விடுதலை வேட்கையோடு வீறு கொண்டு எழுந்தனர். தன்னுயிரையும் துச்சமென மதித்து சுதந்திரக் காற்றைச் சுவாசித்துவிடத் துடித்தனர்.

வேகம் கொண்ட இந்தியர்கள் சிலர் கடல் கடந்தும் இந்திய விடுதலைப் போரட்டத்தைக் கொண்டு சென்று, பிற நாடுகளிடம் ஆங்கிலேயர்களை அகற்ற உதவிகோரினர். அவர்களில் ஜெர்மனியின் துணைகொண்டு ஆங்கிலேய ஆட்சியை இந்தியாவிலிருந்து அகற்ற முற்பட்ட “எம்டன் செண்பகராமனும்”, இந்திய தேசிய இராணுவத்தைக் கட்டமைத்து ஜப்பானியர்களின் உதவியோடு ஆங்கிலேய ஆட்சியை அகற்ற முற்பட்ட நேதாஜி சுபாஷ் சந்திரபோசும் முக்கியமானவர்கள்.

ஆரம்பகாலத்தில் ஆயுதமேந்தித் துவங்கிய ஆங்கிலேய எதிர்ப்பு பின்னர் அரசியல் சார்ந்த போராட்டமாக மாறிய போதிலும், அது ஆங்கிலக் கல்வி கற்ற தலைவர்களுடைய இயக்கமாகவே இருந்தது. அந்நிலையில் மகாத்மா காந்தியின் வருகை இந்திய சுதந்திரப் போராட்டத்தின் போக்கில் மகத்தான மாற்றங்களைக் கொண்டுவந்தது. தலைவர்களிடம் இருந்த இயக்கத்தை மக்களிடம் கொண்டு சேர்த்தார் அவர். உணர்வற்று இருந்த மக்களை உணர்வு கொள்ளச் செய்தார். ஆங்கிலேயரோடு ஒத்துழைக்கக் கூடாது என்ற அவருடைய வார்த்தைகளுக்குப் பொதுமக்களும் உடன் பட்டனர். ஒத்துழையாமை இயக்கம் பிறந்தது. உப்பிலும் கூட மக்களை உணர்வு கொள்ளச் செய்ய முடியும் என்ற உண்மை அவருக்குப் புரிந்திருந்தது. சாமானிய மக்கள் பயன்படுத்தும் உப்பிற்கு வரிவிதிப்பதைக் கண்டித்து சட்ட மறுப்பு இயக்கம் கண்டார். சபர்மதியிலிருந்து தண்டிக்கு அவர் துவக்கிய யாத்திரை பெருந்திரளான மக்களைச் சுதந்திரப் போராட்டத்திற்கு இழுத்து வந்தது. எப்போது எதிர்ப்பு எழுந்ததோ, அப்போதோ பிரிவினை செய்யும் தந்திரத்தைக் கையிலெடுத்துக் கொண்டனர் ஆங்கிலேயர்கள். 1905-ம் ஆண்டே வங்காளத்தைக் கூறுபோட்டு, தங்களின் பிரிவினைத் தந்திரத்தைத் துவக்கிய அவர்கள் வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் பிரினையை வளர்த்தெடுக்கத் தலைப்பட்டனர்.

எத்தனை பிரித்தாலும் முயற்சிகள் நடந்தாலும், அத்தனையையும் தாண்டி விடுதலைப் போராட்டம் வேகம் பெற்றது. ஆயிரம் உண்டிங்கு ஜாதி எனில் அன்னியர் வந்திங்கு புகல் என்ன நீதி? என்ற மகாகவியின் வார்த்தைக்கு மரியாதை கிடைத்தது. எண்ணற்ற தியாகசீலர்கள் தங்களின் வாழ்வையும், இன்னுயிரையும் இந்த தேசத்தின் விடுதலைக்காக அர்ப்பணித்தனர். "செய் அல்லது செத்துமடி" என்ற அண்ணல் காந்தியின் குரலுக்கு இந்த தேசமே ஆர்ப்பரித்து எழுந்தது. ஆங்கிலேய ஆதிக்கம் அடியோடு ஒழிந்தது.

ஆங்கிலேயர் ஆட்சி அகன்று அறுபது ஆண்டுகளுக்கும் மேல் ஆகிவிட்டது, ஆயினும் அவர்கள் உருவாக்கி வைத்து விட்டுப் போன பிரிவினைக்கூறுகள் இன்றைக்கும் உயிரோடு இருக்கின்றன, சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் இந்த தேசத்தைக் கூறுபோட்டுவிட முயற்சிக்கின்றன.

அவை இந்தியா ஒரு தேசமே அல்ல என்றும் கூட வாதிடுகின்றன. ஆனால் ஐரோப்பாவின் பல்வேறு நாடுகளைச் சேர்ந்த மக்கள் வட அமெரிக்கக் கண்டத்தின் பல்வேறு இடங்களில் குடியேறி பின்னர் அவற்றை ஒன்றிணைத்து ஐக்கிய அமெரிக்க நாடுகள் என்ற தேசத்தை உருவாக்கி, அமெரிக்கர்கள் என்ற புதிய தேசிய அடையாளத்தை, உணர்வை உருவாக்க முடியுமென்றால், காலங்காலமாக காஷ்மீர் முதல் கன்னியாகுமரிவரை, ஜம்புத்தீவம், பாரததேசம் என்ற பெயரிலே உணர்வால் ஒன்றிணைந்து வாழ்ந்த மக்கள் ஏன் தங்களுக்குள் ஒன்றுபட்டு ஒரு தேசமாக உருவாக முடியாது.

அப்படித்தான் இங்கே இயல்பாகவே உருவாகியிருக்கிறது தேசமும், தேசிய உணர்வும், வேற்றுமைக்குள் ஒற்றுமை காண்கின்ற அதிசயமும். இந்தியா உலகத்திற்கே வழிகாட்டும் வல்லரசாக வேண்டுமெனில், நம் நாட்டிற்குள் இருக்கும் பல்வேறு பிரச்சனைகளுக்கும் முழுமையான தீர்வுகாண வேண்டுமெனில், இந்தியன் என்ற தேசிய உணர்வை இன்னும் வலுவாக வளர்த்தெடுக்க வேண்டிய அவசியமிருக்கிறது. இல்லாத தேசியத்தை அமெரிக்கர்களால் உருவாக்க முடியுமென்றால், இயல்பாக இருக்கின்ற உணர்வை இன்னும் வலுப்படுத்த நம்மால் ஏன் முடியாது?

சீனா கூட பலதேசங்களின் கூட்டணிதான். தேச எல்லையைப் பாதுகாக்கக் கட்டப்பட்ட சீனப் பெருஞ்சுவர் தற்போது நாட்டின் நடுவிலே இருக்கிறது. பன்முகக் கலாச்சாரங்களின் பரிசோதனைக் கூடமாக கனடா இருக்கிறது. விவரித்தால் பட்டியல் இன்னும் விரியும்.

பிரித்துவிடுவது என்று ஆரம்பித்தால், அதனை எதில் போய் முடிப்பது. மொழிவழியாப் பிரித்தோம். தற்போது அடுத்த கட்டத்திற்கு நகர்ந்திருக்கிறோம். இப்படியே போனால், ஒவ்வொரு நகரத்தையும் ஒரு மாநிலம் ஆக்க வேண்டியதுதானா அல்லது ஒரு தனி நாடாகவே ஆக்கிவிடலாமா? எங்கே போனது இந்தியன் என்ற ஒற்றுமை உணர்வு.

மருதுபாண்டியனால் மகாராஷ்டிரா வரையில் இருந்த மன்னர்களை இணைத்து ஒரு கூட்டமைப்பை ஆங்கிலேயர்களுக்கு எதிராக உருவாக்க முடிந்ததே. நேதாஜின் இந்திய தேசிய இராணுவத்தில் பெண்கள் பிரிவிற்குத் தலைமை தாங்கியது தமிழகத்தின் லட்சுமி ஷேகல் தானே. இந்த இணைப்பைச் சாத்தியப்படுத்தியது எது. இந்தியன் என்ற உணர்வல்லாமல் வேறென்ன?

தேச உணர்வையும், தேசிய சிந்தனையையும் வளர்த்தெடுப்பது என்பது எல்லோரும் இணைந்து செய்ய வேண்டியதொரு பணியாகும். பிரிவினைவாதத்தை வளர்ப்பதற்கான முயற்சிகள் மிகவும் ஆபத்தானவை. தேச உணர்வு அற்றுப் போகிறதென்றால், நாம் தேச உணர்வை வளர்க்கத் தவறிவிட்டோம் என்பதே அதற்குக் காரணம். இது என் நாடு, என் தேசம் என்ற உணர்வு வளர வேண்டும். அந்த உணர்வு கன்னியாகுமரி முதல் காஷ்மீர் வரை பரந்து வாழும் அனைவருக்கும் வரவேண்டும். அது மட்டுமே அனைத்துப் பிரச்சனைகளுக்கும் அருமருந்தாக அமையும்.

“ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு, நம்மில் ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்கும் தாழ்வு” என்ற மகாகவியின் வார்த்தைகளை மனதில் கொள்வோம். இந்தியன் என்ற உணர்வால் ஒன்றுபடுவோம். தேசியம் வளர்ப்போம், தேசம் காப்போம்.

◆◆◆

# மாமனிதர் மொரார்ஜி தேசாய்

முனைவர் **நா. சேதுராமன்**

பிப்ரவரி 29. நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை மட்டுமே வரும் அபூர்வமான நாள். அந்த நாள் மாமனிதர் மொரார்ஜி தேசாயின் பிறந்த நாள் எனும் போது அந்நாளுக்கான முக்கியத்துவமும் மரியாதையும் இன்னும் கூடி விடுகிறது.

இந்தியாவின் உயரிய விருதான பாரத ரத்னாவையும், அதற்கு இணையான பாகிஸ்தானின் நிஷான்–இ–பாகிஸ்தான் என்ற விருதையும் பெற்ற ஒரே பாகிஸ்தானியர் கான் அப்துல் கபார்கான் என்றால், அவ்விரண்டு விருதுகளையும் பெற்ற ஒரே இந்தியர் மொரார்ஜி தேசாய்.

115 ஆண்டுகளுக்கு முன்பு, 1896 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 29 ஆம் நாள் இன்றைய குஜராத் மாநிலத்தின் பல்சார் மாவட்டத்தில் இருக்கும் பதேலி என்ற கிராமத்தில் அவர் பிறந்தார். அவருடைய தந்தை ரங்கோட்ஜி தேசாய் பவநகரில் பள்ளி ஆசிரியராகப் பணிபுரிந்தர். தாய் வஜியா பென் மிகச் சிறந்த குடும்பத்தலைவி. தன்னுடைய தந்தை இறந்தபோது தேசாய் சொன்னார், “அவரிடமிருந்து நான் எந்தச் சொத்தையும் பெறவில்லை. கடமை உணர்வையும், சமய நம்பிக்கையையும், எல்லாச் சூழ்நிலைகளையும் சமமாகப் பாவிக்கும் மனப்பக்குவத்தையும் பெற்றுக்கொண்டேன். நான் பெற்றுக் கொண்டவை உண்மையில் விலைமதிக்க முடியாதவை ஆகும்”. 1911 ஆம் ஆண்டு அவர் மாணவராக இருந்த போதே, அவருடைய தந்தை மரணமடைந்த மூன்றாவது நாளில் சுராஜ்பென் என்ற பெண்ணோடு அவருக்குத் திருமணம் நடைபெற்றது.

பல்சாரில் இருந்த பாய் அவாபாய் உயர்நிலைப் பள்ளியில் படிப்பினை முடித்த அவர், மும்பை வில்சன் கல்லூரியில் பி.எஸ்சி. பயின்று, 1916 ஆம் ஆண்டு பட்டம் பெற்றார். 1918 ஆம் ஆண்டு சிவில் சர்வீஸ் தேர்வில் வெற்றி பெற்ற அவர் 12 ஆண்டுகள் மும்பை மாகாணத்தில் மாவட்டத் துணை ஆட்சியராகப் பணிபுரிந்தார். பின்னர் 1930 ஆம் ஆண்டு மகாத்மா காந்தியின் விடுதலைப் போரில் ஈர்க்கப்பட்டு சட்டமறுப்பு இயக்கத்தில் ஈடுபடுவதற்காகத் தன்னுடைய பதவியை இராஜினாமா செய்தார்.

1931 ஆம் ஆண்டு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் உறுப்பினராகப் பணியாற்றத் தொடங்கிய அவர், குஜராத் மாகாண காங்கிரஸ் கமிட்டியின்

செயலாளராக உயர்ந்து, 1937 ஆம் ஆண்டு வரை அப்பதவி வகித்தார். இதற்கிடையே சட்டமறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டதற்காக 1932 முதல் 1934 வரை இரண்டு ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை பெற்றார். 1935 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் பாண்டிச்சேரிக்குச் சென்று ஸ்ரீ அரவிந்தரைச் சந்தித்த பிறகு, திருவண்ணமலையில் ரமண மகரிஷியின் முன்பு தன்னுள் “முழுமையான அமைதியை” உணர்ந்தார்.

1935 ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்ட இந்திய அரசு சட்டத்தின் அடிப்படையில்இ 1937 ஆம் ஆண்டு நடைபெற்ற மாகாண தேர்தல்களில் போட்டியிட காங்கிரஸ் தீர்மானித்ததால், மும்பை மாகாணத்தில் பி.ஜி. கெர் தலைமையில் முதல் காங்கிரஸ் அரசாங்கம் அமைந்தது. அதில் மொரார்ஜி தேசாய் வருவாய், விவசாயம், வனம் மற்றும் கூட்டுறவுத்துறை அமைச்சராகப் பதவி வகித்தார். அக்காலகட்டத்தில் இரண்டாம் உலகப் போர் ஏற்பட்டது. மாகாண அரசாங்கங்களைக் கலந்தாலோசிக்காமலேயே ஆங்கிலேய அரசாங்கம் இந்தியத் துருப்புக்களை இரண்டாம் உலகப் போரில் ஈடுபடுத்தத் துவங்கியது. அம்முடிவிற்கு எதிர்ப்புத் தெரிவித்து 1939 ஆம் ஆண்டு மாகாண காங்கிரஸ் அரசுகள் பதவி விலகியபோது, மொரார்ஜி தேசாயும் தனது பதவியை ராஜினாமா செய்தார். அச்சூழ்நிலையில் குஜராத் மாகாண காங்கிரஸ் கமிட்டியின் செயலாளராக மீண்டும் பொறுப்பேற்ற அவர் 1946 ஆம் ஆண்டு வரை அப்பதவி வகித்தார். குஜராத் வித்யாபீடத்தின் வேந்தராகவும் அவர் விளங்கினார்.

அண்ணல் காந்தியின் அகிம்சைப் போராட்டத்தில் ஆர்வத்தோடும் அர்ப்பணிப்பு உணர்வோடும் பங்கேற்ற அவர் பலமுறை சிறை சென்றார். “செய் அல்லது செத்துமடி” என்ற மகாத்மாவின் மந்திரத்திற்குக் கட்டுப்பட்டு, 1942 ஆம் ஆண்டு “வெள்ளையனே வெளியேறு” இயக்கத்தில் மிகத்தீவிரமாக ஈடுபட்டார். அதன் காரணமாக கைது செய்யப்பட்ட அவர் 1945 ஆம் ஆண்டுதான் விடுதலை ஆனார்.

1946 ஆம் ஆண்டு நடைபெற்ற மாகாண தேர்தல்களுக்குப் பிறகு மீண்டும் பி.ஜி. கெர் தலைமையிலான அரசாங்கம் அமைந்தபோது, தேசாய் அதில் உள்துறை மற்றும் வருவாய்த்துறை அமைச்சராகப் பதவி வகித்தார். 1952 ஆம் ஆண்டு புல்சார் தொகுதியில் போட்டியிட்டு வென்று பம்பாய் மாகாண முதலமைச்சர் ஆனார். 1956 வரை அப்பதவியில் இருந்த அவர் பின்னர் ஜவகர்லால் நேருவின் அழைப்பை ஏற்று 14 நவம்பர் 1956 முதல் மத்திய அரசில் வணிகம் மற்றும் தொழில்துறை அமைச்சராகப் பொறுப்பேற்றார். பின்னர் 22 மார்ச் 1958 முதல் இந்தியாவின் நிதி அமைச்சராகப் பொறுப்பேற்றார். நிதி

அமைச்சராகப் பத்து நிதிநிலை அறிக்கைகளைச் சமர்ப்பித்த பெருமைக்குரியவர் அவர். “மூத்த தலைவர்கள் எல்லாம் ஆட்சிப்பணியைத் துறந்து கட்சிப்பணிக்குச் செல்ல வேண்டும்” என்ற காமராஜரின் திட்டத்தை ஏற்று 1963 ஆம் ஆண்டு அவர் பதவி விலகினார்.

1964 ஆம் ஆண்டு பண்டித நேருவின் மரணத்தால் இந்திய அரசியலில் ஒரு மாபெரும் வெற்றிடம் ஏற்பட்டது. இனி இந்தியாவை வழி நடத்தப் போகிறவர் யார்? அடுத்த இந்தியப் பிரதமர் யார்? என்ற கேள்விகள் எல்லோர் மனதிலும் எழுந்தன. அச்சூழ்நிலையில் மொரார்ஜி தேசாய் பிரதமர் பதவிக்குப் போட்டியிட விரும்பினார். ஆனால் இந்திய தேசிய காங்கிரஸின் அகில இந்தியத்தலைவர் காமராஜர் லால்பகதூர் சாஸ்திரியை அப்பதவிக்கு முன்னிறுத்த விரும்பினார். தலைவர் காமராஜரின் அறிவுரையை ஏற்று மொரார்ஜி தேசாய் போட்டியிலிருந்து விலகிக்கொண்டு, பிரதமர் பதவியை லால்பகதூர் சாஸ்திரிக்கு விட்டுக் கொடுத்தார்.

சாஸ்திரியின் ஆட்சிக்காலத்தில் அமைக்கப்பட்ட நிர்வாக சீர்திருத்தக் குழுவிற்குத் தலைவராக மொரார்ஜி தேசாய் பொறுப்பேற்றார்.

1966 ஆம் ஆண்டு லால்பகதூர் சாஸ்திரி மரணமடைந்த போது, பண்டித நேருவின் மரணத்திற்குப் பிறகு ஏற்பட்ட அதே சூழ்நிலை மீண்டும் ஏற்பட்டது. அடுத்த இந்தியப் பிரதமர் யார்? என்ற போட்டியில் மொரார்ஜி தேசாய் மீண்டும் முன் நின்றார். இம்முறை அவர் உறுதியாக இருந்தார். போட்டியிலிருந்து விலகத்தயாராக இல்லை. ஆயினும்இ ஜனநாயக முறைப்படி நடந்த உட்கட்சித் தேர்தலில், பெருந்தலைவர் காமராஜரின் ஆதரவு பெற்ற இந்திரா காந்தி 355 வாக்குகள் பெற, முதுபெரும் காங்கிரஸ் தலைவரான மொரார்ஜி 169 வாக்குகள் மட்டுமே பெற்று தோற்றுப்போனார். தோல்வியால் துவண்டு விடவில்லை அவர். ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டு காங்கிரஸ் கட்சியின் வளர்ச்சிக்கு அயராது பாடுபட்டார்.

இந்திரா காந்தியின் அழைப்பை ஏற்று, 1967 ஆம் ஆண்டு முதல் இந்தியாவின் துணைப் பிரதமராகவும் நிதி அமைச்சராகவும் பதவி வகித்தார். ஆனால், 1969 ஆம் ஆண்டு நடந்த ஜனாதிபதி தேர்தலில் காங்கிரஸ் கட்சியின் வேட்பாளரான நீலம் சஞ்சீவரெட்டியை தோற்கடிக்க பிரதமர் இந்திரா காந்தி முனைந்ததோடு, தேசாயிடமிருந்து நிதித்துறையையும் பறித்துக்கொண்டதால், மொரார்ஜி தேசாய் துணைப் பிரதமர் பதவியிலிருந்து விலகினார்.

இந்திரா காந்தியின் நடவடிக்கைகளால் 1969 ஆம் ஆண்டு இந்திய தேசிய காங்கிரஸ் பிளவு பட்டபோது, தேசாய் இந்திரா காந்திக்கு எதிராக ஸ்தாபன காங்கிரஸில் இணைந்தார். இந்திரா காந்தியின் செயல்பாடுகளைக் கடுமையாக விமர்சித்தார்.

1975 ஆம் ஆண்டு இந்திரா காந்தி குஜராத் மாநில சட்டசபையைக் கலைத்ததால், மொரார்ஜி தேசாய் காலவரையற்ற உண்ணாவிரதப் போராட்டத்தில் இறங்கினார். அதன் விளைவாக அவ்வாண்டு ஜீன் மாதம் குஜராத் சட்டசபைத் தேர்தல் நடைபெற்றது. அதில் ஜனதா முன்னனி அறுதிப் பெரும்பான்மை பெற்று பாபுபாய் படேல் முதல்வரானார்.

12 ஜீன் 1975 அன்று, அலகாபாத் நீதிமன்றம் ரேபரேலி தொகுதியில் இந்திரா காந்தி வெற்றி பெற்றது செல்லாது என அறிவித்த பிறகு, மொரார்ஜி தேசாய் இந்திரா காந்தி உடனடியாகப் பதவி விலக வேண்டுமென்று வலியுறுத்தினார். ஆனால் இந்திரா காந்தி பதவி விலகவில்லை, இந்த தேசத்தில் அவசர நிலையைப் பிரகடனப் படுத்தினார். அடிப்படை உரிமைகள் முடக்கி வைக்கப்பட்டு, அடக்குமுறைகள் கட்டவிழ்த்து விடப்பட்டன. பத்திரிக்கைச் சுதந்திரம் பறிபோனது.

பல்வேறு எதிர்க்கட்சித்தலைவர்களுடன் 1975 ஆம் ஆண்டு ஜுன் 26 ஆம் தேதி உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்ட மொரார்ஜி தேசாய் 1977 ஆம் ஆண்டு ஜனவரி 18 ஆம் தேதி சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார். சிறையிலிருந்து வெளிவந்த தலைவர்கள் ஒன்றிணைந்து ஜனதா கட்சியை உருவாக்கினர். பின்னர் எற்பட்ட “ஜனதா புரட்சியின்” விளைவாக மார்ச் மாதம் நடந்த நாடாளுமன்றத் தேர்தலில் 542 இடங்களில் 330 இடங்களைக் கைப்பற்றி ஜனதா கட்சி மாபெரும் வெற்றி பெற்றது.

23 மார்ச் 1977 ஆம் ஆண்டு 81 வயதான மொரார்ஜி தேசாய் இந்தியாவின் நான்காவது பிரதமராகப் பொறுப்பேற்றார். பதவி ஏற்றவுடன் அவசர நிலைக்காலக் கொடுமைகளை நீக்கி ஜனநாயகத்தை நிலைநாட்ட அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டார். அடிப்படை உரிமைகள், பத்திரிக்கைச் சுதந்திரம், அரசியல் கட்சிகளின் சுதந்திரமான செயல்பாடு மற்றும் தனிநபர் சுதந்திரம் ஆகியவற்றை மீட்டெடுத்தார். 44 வது அரசியல் சட்டத் திருத்தத்தின் மூலம் இந்திய அரசியலமைப்பிற்கு ஏற்பட்ட ஊறுகளைக் களைந்தார். மாநில சட்டசபைகளும், மத்திய பாராளுமன்றமும் கொண்டுவரும் சட்டங்கள் அரசியலமைப்புச் சட்டத்திற்கு உட்பட்டதுதானா என ஆய்வு செய்யும், உயர் நீதிமன்ற, உச்ச நீதிமன்ற உரிமைகள் மீட்டெடுக்கப்பட்டன.

“இந்தியா கிராமங்களில் வாழ்கிறது” என்ற அண்ணல் காந்தியின் வார்த்தைகளை அடிப்படையாகக் கொண்டு கிராமங்களில் அடிப்படைக் கட்டமைப்பு வசதிகளை மேம்படுத்தத் தேவையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. சிறுதொழில் வளர்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது.

நிலவரியைக் குறைத்தல் மற்றும் பெருமளவில் மானியம் அளித்தல் போன்ற நடவடிக்கைகளின் மூலம் நாட்டின் விவசாய முன்னேற்றம் வேகப்படுத்தப்பட்டது.

ஏழை விவசாயிகளின் வாழ்வில் பெரிதும் அக்கறை கொண்டிருந்த அவர், வேலைவாய்ப்பற்ற கிராமப்புற மக்களுக்காக, வேலைக்கு உணவு திட்டத்தை அறிமுகப்படுத்தினார். அதன் மூலம் கிராமங்களில் சாலைகளை அமைத்தல், பள்ளிக் கட்டிடங்கள் கட்டுதல் போன்ற பணிகள் மேற்கொள்ளப்பட்டன.

அது மட்டுமின்றி "தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம்" என்ற தேசிய கவி பாரதியின் வார்த்தைகளை உண்மையாக்கிக் காட்டியவரும் அவரே. ஏனென்றால் ஒவ்வொரு உணவு விடுதிகளும் ஒரு நாளைக்கு குறிப்பிட்ட எண்ணிக்கையில் ஒரு ரூபாய்க்கு ஏழைகளுக்கு உணவு வழங்க வேண்டுமென்று உத்தரவிட்டார்.

அதை ஏற்றுக்கொண்ட உணவுவிடுதிகளுக்கு மட்டுமே உரிமம் அளிக்கப்பட்டது. அந்த "ஜனதா சாப்பாடு" ஏழைகளின் பசியைப் போக்கி அவருக்குப் பெரும் புகழைப் பெற்றுத்தந்தது. இரண்டு, ஆண்டுகள் மிகச்சரியாகச் சொல்வதெனில் 857 நாட்கள் மட்டுமே ஆட்சியில் இருந்தாலும், அவருடைய ஆட்சிக்காலம் கடும் பஞ்சங்களையும், இயற்கைச் சீற்றங்கள் பலவற்றைவும் எதிர்கொள்ள வேண்டியிருந்த போதிலும் மக்கள் எந்த வகையிலும் இன்னல் அனுபவிக்காவண்ணம் மிகச்சிறப்பான, நிர்வாகத் திறமை மிகுந்த, ஊழலற்ற, நேர்மையான, தூய்மையான ஆட்சியை மக்களுக்குத் தந்தார்.

சர்வதேச அளவிலே பெட்ரோலியம் மற்றும் பெட்ரோலியப் பொருட்களின் விலைகள் உயர்ந்த போதிலும், தனது திறமையான நிர்வாகத்தால் விலைவாசியைப் பெரிதும் கட்டுக்குள் வைத்திருந்தார். ரேஷன் பொருட்கள் மக்களுக்கு மலிவு விலையில் கிடைக்கச் செய்தார். அதன் மூலம் உற்பத்திப் பொருட்கள் அநியாய விலைக்கு விற்கப்படுவதையும், அப்பாவி மக்கள் ஏமாறுவதையும் தடுத்தார். உற்பத்திப் பொருட்களின் மீது அதிகபட்ச சில்லறை விலை (MRP) குறிக்கப்பட வேண்டும் என்பதை அறிமுகப்படுத்தி அதைக் கட்டாயமாக்கினார்.

இன்றைக்கு ஒரு மாநிலத்திற்குள்ளேயே விவசாயப் பொருட்களை ஒரிடத்தில் இருந்து, வேறொரு இடத்திற்கு கொண்டுசெல்ல முடியாத நிலை நிலவுகிறது. ஆனால், மொரார்ஜி தேசாய் இந்தியா முழுமைக்கும் ஒரே

வேளாண்மைப் பிராந்தியமாக அறிவித்து விவசாயிகளின் விளைபொருட்கள் இந்தியா முழுவதும் கொண்டு செல்ல வகை செய்தார். அதன் மூலம் விவசாயிகளின் விளைபொருட்களுக்கு உரிய விலை கிடைக்க வழி ஏற்படுத்தினார்.

உள்நாட்டில் மட்டுமின்றி, அயலுறவுக்கொள்கையிலும் அவர் தூய்மையைக் கடைபிடித்தார். அவர் “தூய அணி சேராக் கொள்கையை” அறிவித்து அதைச் செயல்படுத்தினார். அமெரிக்காவுடனும், சோவியத் ரஷ்யாவுடனும் சமமட்டத்திலான உறவுகளைப் பராமரித்தார். பாகிஸ்தானின் ஜியாவுல் ஹக் உடன் நேசக்கரம் நீட்டி அந்நாட்டுடன் நல்லுறவைப் பராமரித்தார். சீனாவுடன் ராஜதந்திர உறவுகளை மறு சீரமைத்து பலப்படுத்திக்கொண்டார். அமைதிக்காகக் கூட அவர் அணு ஆயுதம் வெடிக்கவிரும்பவில்லை.

எல்லாவற்றிற்கும் மேலாக, அண்ணல் காந்தியின் அப்பழுக்கற்ற தொண்டரான அவர், இந்திய தேச மக்களுக்கு ஜனநாயகத்தின் மீதான நம்பிக்கையை மீட்டெடுத்துக் கொடுத்ததே அவர் செய்த மாபெரும் சாதனையாகும்.

ஜனசங்கத்தினர், ஜனதா கட்சியிலும் ஆர்.எஸ்.எஸ். இயக்கத்திலும் ஒரே சமயத்தில் அங்கம் வகித்ததால் எழுந்த இரட்டை உறுப்பினர் பிரச்சனையாலும், சரண்சிங் ஜனதா கூட்டணியிலிருந்து விலகியதாலும், ஜூலை 15 ஆம் நாள் 1979 ஆம் ஆண்டு மொரார்ஜி தேசாய் தனது பிரதமர் பதவியை ராஜினாமா செய்தார்.

தனது 83 வது வயதில் பிரதமர் பதவியிலிருந்து மட்டுமின்றி, அரசியலில் இருந்தும் அவர் ஓய்வு பெற்றார். அதன் பின்னர், மும்பை மாநகரத்தில் வாழ்ந்த அவர், 10 ஏப்ரல் 1995 ஆம் ஆண்டு தனது 99 வது வயதில் இப்பூவுலகை விட்டு மறைந்தார்.

பொது வாழ்வில் நல்ல பல விழுமியங்களையும், அஞ்சாத நேர்மைத்துணிவையும், கொள்கை உறுதியையும் கொண்டிருந்த அவர் அடிக்கடி சொல்லும் வார்த்தை ஒருவர் தன் வாழ்வில் உண்மைக்கும், தனது நம்பிக்கைகும் விரோதமில்லாமல் செயல்பட வேண்டும் என்பதே. அவ்வார்த்தைகளுக்கு அவரே மிகச் சிறந்த உதாரணம்.

*(நன்றி: தினமணி - 29.02.2012 அன்று தினமணி நாளிதழில் வெளியான கட்டுரை)*

◆◆◆

# பெருந்தலைவர் காமராஜர் – ஓர் அரசியல் பிதாமகன்

முனைவர் **க. ஜான்குமார்**

“அரசியலை நாம் தவிர்போமானால், நம்மால் தவிர்க்கப்பட வேண்டியவர்கள் நம்மை ஆள நேரிடும்” என்றுக் கூறினார், கிரேக்க அறிஞர் பிளாட்டோ. அதனால் தான் கடந்த நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள் அரசியலை தவிர்காமல் இருந்ததினால் காமராஜர் உட்பட நல்லவர்கள் பலரை ஆதரித்து ஆரோக்கியமான அரசியலுக்கு வழிவகுத்தனர்.

அரசியல் என்பது சமூகத்திற்கு செய்யும் சேவை என்றார் காந்தி, சமுதாயத்திற்கு செய்யும் சேவை, கடவுளுக்கு செய்யும் சேவைக்கு சமம் என்ற நம்பிக்கை உடையவர் அவர். அதனால் அவர் வழியில் வந்த காமராஜர் இச்சமுதாயத்திற்கு ஆற்றிய சேவை அளவிட இயலாததாகும். தன் தந்தை குமாரசாமியின் மரணம் காரணமாக ஆறாம் வகுப்பை தாண்டி கல்வி கற்க இயலாத நிலை. குடும்ப வறுமையின் காரணமாக பள்ளிப்படிப்பை தொடராமல் தன் தாய் மாமன் துணிக்கடையில் வேலை பார்க்க வேண்டிய நிர்பந்தம் என்ற சூழ்நலையிலும், தேசத்தின் மீதும், இச்சமுதாயத்தின் நலன் மீதும் அக்கறை கொண்ட காரணத்தினால் அப்பருவத்திலேயே அரசியல் ஆர்வம் உடையவராக திகழ்ந்தார்.

அரசியலில் இருந்து அவரை தவிர்க்காவிட்டால், குடும்ப வறுமை நீங்காமல் போய் விடுமோ என்ற தாயின் கவலையால் திருவனந்தபுரத்தில் இருந்த உறவினர் மரக்கடை வேலைக்கு அனுப்பப்பட்டாலும், தேசபக்தி குறையாமல் இருந்தார் காமராஜர். அங்கும், அவரது சமூக அக்கறை எவ்விதத்திலும் குறையாமல் இருந்ததினால் ஈழவர்களுக்கு வைக்கம் கோயில் வீதியில் நடக்க மறுக்கப்பட்ட அனுமதியை பெறுவதற்காக இந்திய தேசியக் காங்கிரஸின் திருவாங்கூர் கிளை நடத்திய போராட்டத்தில் காங்கிரஸ் சார்பாகக் கலந்து கொண்ட ஈ.வே.ராமசாமி அவர்களுடன் இளைஞரான காமராஜரும் கலந்துக் கொண்டார். 1924–இல் நடைப்பெற்ற இப்போரட்டத்தில் சமூகத்தின் மீது இருந்த அக்கரையினால் வறுமையை புறந்தள்ளிப் போராட்டத்தில் கலந்துக் கொண்டவர் கர்மவீரர் காமராஜர்.

இன்றைக்கு பதவிக்காக எதையும் செய்ய உள்ள அரசியல்வாதிகளை நாம் புறந்தள்ள மறுக்கிறோம். ஆனால், காமராஜர் எப்படி தன்னைவிட உயர்ந்தவர்களால் மதிக்கப்பட்டார் என்பதற்கு உதாரணங்கள் எடுத்துரைக்கலாம்.

1936–இல் தமிழ்நாடு காங்கிரஸ் மாநில செயலாளராகவும், 1937–இல் நடைபெற்ற சட்டமன்ற தேர்தலில், சாத்தூர் தொகுதியில் இருந்து போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்படுவதற்கு சத்தியமூர்த்தி போன்ற தலைவர்கள் காரணமாக இருந்தார்கள் என்பதினை நாம் அறிவோம். அவர் 1940–இல் மாநிலத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட போது அவருடைய அரசியல் குரு சத்தியமூர்த்தி எந்த தயக்கமும் இன்றி தன் சீடனுடன் பணியாற்ற மாநில செயலாளராக இருந்தார் என்பது வியக்கத்தக்க செய்தியாகும். தேசமும், சமுதாயமும் முக்கியம் என்று கருதியக் காரணத்தினால்தான் இது போன்றவை நடந்தன. இந்நிகழ்வுகளை இன்றைய அரசியல்வாதிகளால் நினைத்துக் கூட பார்க்க முடியுமா? இந்திய சேதத்திற்கு சுதந்திரம் கிடைக்கும் தருவாயில், 1946–இல் அமைக்கப்பட்ட இடைக்கால அரசில் அன்றைக்கு மாநிலத்தலைவராக இருந்த காமராஜர் நினைத்திருந்தால் போட்டியிட்டு முதல்வராயிருக்கலாம். ஆனால் அவர் அதைச் செய்யமால், ஓமாந்தூர் ராமசாமி ரெட்டியார் மற்றும் குமாரசாமி ராஜா ஆகியோரை முதல்வர்களாக்கி அன்றே “கிங்மேக்கர்” ஆக, அரசியலில் ஓர் பிதாமகனாக திகழ்ந்தார்.

1954 –இல் தானாக வந்த முதல்வர் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பிறகு அவர் செய்த காரியம் அனைவரையும் வியக்க வைத்தது. தன்னை எதிர்த்துப் போட்டியிட்ட C. சுப்பிரமணியத்தையும் அவருக்கு துணை நின்ற M. பக்தவச்சலத்தையும் தனது அமைச்சரவையில் சேர்த்து தனிமனித விரோதத்தை வளர்க்காமல், அனைவருடனும் இணைந்து தேசத்தை, இச்சமுதாயத்தை வளர்ப்பது தான் ஓர் அரசியல்வாதியின் கடமை என்று உணர்த்தியவர் காமராஜர்.

தாழ்த்தப்பட்டவர்களுக்காக உழைப்பதாக, ஏமாற்றி உருவாக்கப்பட்ட நீதிக்கட்சி தனது ஆட்சியில் (1920–1937) செய்ய தவறிய மிகப்பெரிய தவறை தனது ஆட்சியில் நிவர்த்தி செய்தார். இன்றுவரை கழகங்கள் செய்ய துணியாத ஓர் காரியத்தை இவர் செய்து சரித்திரம் படைத்தார். தாழ்த்தப்பட்ட சமுதாயத்தை சேர்ந்த P. கக்கன் அவர்களை காங்கிரஸ் கட்சியின் தமிழ்நாடு மாநிலத் தலைவராக்கினார். இன்னொரு தாழ்த்தப்பட்ட சமுதாயத்தை சார்ந்த பரமேஸ்வரன் அவர்களை அறநிலையத்துறை அமைச்சராக்கி முதன் முதலில் அச்சமுதாயத்திற்கு அமைச்சர் பதவி தந்தவர் என்ற மாபெரும் பெருமைக்கு உரியவரானார். காமராஜர் இதுமட்டுமல்லாமல் திருமதி லூர்தம்மாள் சைமன் என்ற கிருஸ்தவ பெண்ணை அமைச்சராக்கி பெருமைப் பெற்றவரானார். பெருந்தலைவர் காமராஜர், காமராஜருக்கு தேசத்தின் மீதும் சமுதாயத்தின் மீதும் அக்கரை இருந்தக் காரணத்தினால் தான் தமிழகத்தில் திராவிட முன்னேற்ற கழகம் 1957இல் 15 சட்டமன்ற தொகுதிகளாகப் பெற்றதை சரித்துக் கொள்ள முடியவில்லை.

மக்களின் அரசியல் ஆர்வமற்ற நிலையினால் ஏற்பட்ட இந்த விளைவை தடுப்பதற்காக அந்த 15 தொகுதிகளில் 1962-இல் நடந்த பொது தேர்தலில் முழு கவனம் செலுத்தினார். அந்த 15-இல் 14 இடங்களில் தி.மு.க.வை தோற்கடித்தார். தி.மு.க வின் நிறுவனத் தலைவர்

C.N. அண்ணாத்துரையும் காஞ்சிபுரத்தில் தோற்கடிக்கப்பட்டார். ஆனால் துரதிருஷ்டமாக மற்ற 50 இடங்களில் அக்கட்சி வெற்றி பெற்றதனால் ஓர் முடிவுக்கு வந்தார். மக்களிடம் அரசியல் விழிப்புணர்வு ஏற்படுத்த முதலமைச்சர் பொறுப்பு ஓர் தடையாக இருப்பதினால் 1963 - இல் தனது முதல்வர் பதவியிலிருந்து விலகினார். ஆனால் இம்மனிதரை ஒரு மாநிலத்திற்குள் மட்டும் பயன்படுத்துவதை விட தேச முழுமைக்கும் பயன்படுத்த வேண்டும் என்று விரும்பிய அன்றைய பிரதமர் நேரு, இவரை காங்கிரஸ் கட்சியின் அகில இந்தியத் தலைவராக்கி பெருமைப்பட்டார். இதனால் தேசம் பயன் பெற்றது. நேருவின் மரணத்திற்கு பிறகு “யார்” என்று உலகமே இந்தியாவை உற்று பார்க்கும் நேரத்தில் சாஸ்திரி அவருக்கு பிறகு இந்திரா காந்தியையும் பிரதமர் ஆக்கி உலகம் போற்றிய “கிங் மேக்கர்” ஆனார்.

தமிழகம் ஒரு நல்ல வழிகாட்டியை முழுமையாக பயன்படுத்த முடியாமல் போயிற்று. அவர் எதிர்பார்த்த அரசியல் ஆபத்து தி.மு.க.வின் 1967 – ஆம் ஆண்டு வெற்றியினால் தொடங்கியது. அவரது இறுதி மூச்சுவரை தி.மு.க எதிர்ப்பில் உறுதியாக இருந்தார். இன்று அவரது தொண்டர்கள் என்று கூறி காமராஜரை தங்களது அரசியலுக்கு பயன்படுத்துபவர்கள் காமராஜர் யாரை அரசியலில் வளர விடக்கூடாது, அது சமுதாயத்திற்கு கேடு விளைவிக்கும் என்று எண்ணினாரோ, அவர்களிடயே சேர்ந்து மக்களின் மறதியை, அரசியல் ஆர்வமின்மையைப் பயன்படுத்தி காமராஜ் ஆட்சி அமைப்போம். என்று கூறுகின்றனர்.

அதனால் தான் இந்த கட்டுரையின் துவக்கத்தில் அரசியலைப் பற்றி கிரேக்க தத்துவஞானி பிளாட்டோ சொன்ன கருத்தை எடுத்துரைத்தோம். ஆகவே மக்களே? அரசியலை தவிர்க்காதீர்கள். அப்படி நாம் தவிர்த்தோமானால் பிளாட்டோ சொன்னதைப் போல நம்மால் தவிர்க்கப்பட வேண்டியவர்கள் இன்று நம்மை ஆண்டுக் கொண்டு இருக்கிறார்கள். நல்லவர்கள் பலர் அரசியலுக்கு வர வேண்டும். தேசமும், சமுதாயமும், அரசியலில் ஆர்வமிக்கவர்களாக வேண்டும். கூடிய விரைவில் இவைகள் நடக்க வேண்டும். மீண்டும் காமராஜர் ஆட்சியை அவரது உண்மையான தொண்டர்கள் மூலம் ஏற்படுத்துவோம்.

*வாழ்க காமராஜர் புகழ்! வளர்க ஜனநாயகம்!!*



# தமிழகத்தின் பொற்காலம்

முனைவர் **நா. சேதுராமன்**

ஏப்ரல் 13. தமிழகத்தின் அரசியல் வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய நாள். இந்திய தேசத்தின் ஈடுஇணையற்ற தலைவர் பெருந்தலைவர் காமராஜர் தமிழகத்தின் முதல்வராகப் பொறுப்பேற்ற நாள்.

விருதுபட்டியிலே பிறந்து, தன் இல்வாழ்வைத் துறந்து, பதினாறு வயதிலேயே பாரதத்தின் விடுதலைக்காகப் பாடுபடத்துவங்கி, அண்ணல் காந்தியின் அகிம்சை வழி நின்று, பலமுறை சிறைசென்று, தீரர் சத்தியமூர்த்தியின் பாசத்திற்குரிய சீடராகத் திகழ்ந்து, தமிழக காங்கிரஸின் தலைவராக உயர்ந்து, தன்னிகரற்ற தலைவராகத் திகழ்ந்த கர்மவீரர் காமராஜர், 13 ஏப்ரல் 1954-ம் ஆண்டு சென்னை மாநிலத்தின் முதலமைச்சராகப் பொறுப்பேற்றார். 1954-ம் ஆண்டு முதல் 1963-ம் ஆண்டு வரை, 9 ஆண்டுகள், காமராஜரின் ஆட்சிக்காலம். அது தமிழகத்தின் பொற்காலம்.

தமிழ்ப் புத்தாண்டு தினமான 13 ஏப்ரல் 1954 அன்று காமராஜர் தனது அமைச்சரவை சகாக்களுடன் முதலமைச்சராகப் பொறுப்பேற்றுக்கொண்டார். எவருடைய தலையீடுமின்றி தனது அமைச்சரவையைத் தேர்வு செய்தார்.

காமராஜர் முதலமைச்சராகப் பொறுப்பேற்றபோது சட்டமன்ற உறுப்பினராக இல்லை, மாறாக, ஸ்ரீவில்லிபுத்தூர் பாராளுமன்றத் தொகுதியின் உறுப்பினராக இருந்தார். ஆறு மாதங்களுக்குள் அவர் சட்டப்பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். மிக எளிதாக சட்டமேலவை உறுப்பினராவதற்கு அவருக்கு வாய்ப்பிருந்தது. ஆயினும், தேர்தலில் போட்டியிட்டு, மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவதையே அவர் விரும்பினார். எளிதில் வெற்றி பெறக்கூடிய சாதகமான பல சட்டப்பேரவைத் தொகுதிகள் அவருக்குப் பரிந்துரைக்கப்பட்டன. பலர் அவருக்காக சட்டப்பேரவை உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்யவும் முன்வந்தனர். ஆனால் காமராஜர் அதை விரும்பவில்லை. மாநிலம் முழுவதற்குமான பிரதிநிதியாக, முதலமைச்சராக, இருக்கும் தான், மாநிலத்தின் எத்தொகுதியில் இருந்தும் போட்டியிட தயங்கக் கூடாது எனக் கருதினார். அப்போது வட ஆற்காடு மாவட்டத்தில் காலியாக இருந்த குடியாத்தம் தொகுதியில் போட்டியிட முடிவெடுத்தார். அத்தொகுதியில் காமராஜருக்கு எதிராக கம்யூனிஸ்ட் கட்சி மட்டுமே கே. கோதண்டராமன் என்ற வேட்பாளரை நிறுத்தியது. பெரியார் “பச்சைத் தமிழனுக்கு” தனது ஆதரவை வெளிப்படையாக அறிவித்தார். அண்ணாதுரை

தனது கட்சியின் திராவிட நாடு இதழில் காமராஜருக்கு ஆதரவாகக் கட்டுரைகள் பல எழுதினார். ஏகோபித்த ஆதரவு பெற்ற காமராஜர் கம்யூனிஸ்ட் கட்சியின் கோட்டையாகக் கருதப்பட்ட குடியாத்தம் தொகுதியில் மாபெரும் வெற்றி பெற்றார்.

படிப்பறிவில்லாத காமராஜர் எப்படிப் பாராள முடியும் எனப் பலரும் பரிகாசம் செய்த நிலையில் பதவி ஏற்ற அவர் தனது அனுபவம் மிக்க திறமையான நடவடிக்கைகளால் தான் ஒரு சிறந்த நிர்வாகி என்பதை நிரூபித்தார். அவருடைய நியாயமான, எளிமையான அணுகுமுறை கட்சியில் மட்டுமின்றி, ஆட்சியிலும் அவருக்கு நற்பெயரைப் பெற்றுத்தந்தது. சரியான முடிவுகளை விரைந்து எடுப்பதில் அவர் வல்லவராகத் திகழ்ந்தார்.

தன் தலைமையை விரும்பாதவர்களாயினும் கூட அவர்களது திறமை இந்த தேசத்திற்குப் பயன்படுமானால், அவர்களையும் அரவணைத்துச் செல்ல காமராஜர் ஒருபோதும் தயங்கியதில்லை. அவ்வகையில், முதலமைச்சர் பதவிக்கான உட்கட்சித் தேர்தலில் தன்னை எதிர்த்துப் போட்டியிட்ட சி. சுப்பிரமணியத்தை மட்டுமின்றி, இராஜாஜியின் அமைச்சரவையில் அங்கம் வகித்த எம். பக்தவச்சலம், ஏ.பி. ஷெட்டி ஆகியோரையும் தன்னுடைய அமைச்சரவையில் சேர்த்துக் கொண்டார்.

தாழ்த்தப்பட்ட சமூகத்தை சேர்ந்த பி. பரமேஸ்வரன் அவர்களை இந்துசமய அறநிலையத்துறை அமைச்சராக்கினார். அது தீண்டாமையை ஒழிப்பதற்கான காமராஜரின் ஒரு சிறந்த இராஜதந்திர நடவடிக்கையாக அமைந்ததோடு, தாழ்த்தப்பட்டோரின் முன்னேற்றத்தில் அவருக்கு இருந்த அக்கறையையும் வெளிப்படுத்தியது. அது தமிழகம் முழுவதும் இருந்த தாழ்த்தப்பட்ட மக்களின் ஏகோபித்த ஆதரவை அவருக்குப் பெற்றுத்தந்தது.

1956-ம் ஆண்டு மாநில மறுசீரமைப்புச் சட்டம் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்ட பிறகு, தமிழகத்தில் 1957-ம் ஆண்டு 205 தொகுதிகளுக்கு நடைபெற்ற இரண்டாவது சட்டமன்றப் பொதுத்தேர்தலில் சாத்தூர் தொகுதியில் போட்டியிட்டு வென்று காமராஜர் மீண்டும் முதல்வரானார். காங்கிரஸ் கட்சி 204 இடங்களில் போட்டியிட்டு 151 இடங்களைக் கைப்பற்றியது. இம்முறை அவருடைய அமைச்சரவையில் நான்கு புதியவர்கள் பொறுப்பேற்றனர். தமிழகத்தின் தொழில்துறையை முன்னேற்றம் காணச்செய்வதற்கு ஆர். வெங்கட்ராமன் அவர்களை தொழில்துறை அமைச்சராகவும், பெண்ணினத்திற்குப் பிரதிநிதித்துவம் வழங்குவதற்காக மீனவ சமூகத்தைச் சார்ந்த கிருஸ்தவப் பெண் லூர்தம்மாள் சைமன் அவர்களை உள்ளாட்சித்துறை அமைச்சராகவும், தியாக மனமும், திறமையும் ஒருங்கே பெற்ற தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த தலைவர் பி. கக்கன் அவர்களை பொதுப்பணித்துறை அமைச்சராகவும், மின்சாரத்துறை

அமைச்சராக வி. இராமையா அவர்களையும் தனது அமைச்சரவையில் புதிய அமைச்சர்களாக்கினார். உள்துறை அமைச்சராக எம். பக்தவச்சலமும், நிதித்துறை அமைச்சராக சி. சுப்பிரமணியமும், வருவாய்த்துறை அமைச்சராக எம்.ஏ. மாணிக்கவேலு நாயக்கரும் பொறுப்பேற்றனர்.

1962-ம் ஆண்டு நடைபெற்ற மூன்றாவது சட்டப்பேரவைத் தேர்தலில் வெற்றி பெற்று காமராஜர் மூன்றாவது முறையாகத் தமிழக முதல்வரானார். மொத்தமிருந்த 206 தொகுதிகளில் காங்கிரஸ் 130 இடங்களில் வெற்றி பெற்றது. இம்முறையும் பொது சுகாதாரம், பெண்கள் மற்றும் குழந்தைகள் நலத்துறை அமைச்சராகச் ஜோதி வெங்கடாசலம், கூட்டுறவு மற்றும் வனத்துறை அமைச்சராக என்.எஸ்.எஸ். மன்றாடியார், விளம்பரம் மற்றும் தகவல் துறை அமைச்சராக ஜி. பூவராகவன் மற்றும் உள்ளாட்சித்துறை அமைச்சராக எஸ்.எம். அப்துல் மஜீத் ஆகிய நான்கு புதியவர்கள் அவரது அமைச்சரவையில் இடம் பெற்றனர். கல்வித்துறை அமைச்சராக எம். பக்தவச்சலமும், நிதித்துறை அமைச்சராக ஆர். வெங்கட்ராமனும், விவசாயத்துறை அமைச்சராகப் பி. கக்கனும், பொதுப்பணி மற்றும் வருவாய்த்துறை அமைச்சராக வி. இராமையாவும் பொறுப்பேற்றனர். அஷ்டதிக்கஜங்களைப் போல் எட்டு அமைச்சர்களை மட்டுமே கொண்ட அவருடைய சிறிய அமைச்சரவை மிகத் திறமையாகச் செயல்பட்டது.

“எந்தப் பிரச்சனையாயினும் அதனை எதிர்கொள்ளுங்கள், பிரச்சனைகளைத் தவிர்க்காதீர்கள், அவற்றிற்கு உரிய தீர்வுகளைக் காணுங்கள், நீங்கள் செய்யும் காரியம் சிறிதாயினும் மக்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைவர்” என்பதே காமராஜர் தன் அமைச்சர்களுக்குச் சொன்ன அறிவுரையாகும்.

காமராஜர் ஒரு மக்கள் தலைவராவார். அவர் பாமர மக்களில் ஒருவராக இருந்து, இந்த தேசத்தின் விடுதலைக்காகவும், வாழ்விற்காகவும் தன் வாழ்வைத் தியாகம் செய்து, மக்களின் ஆதரவோடு காங்கிரஸ் தலைவராகி, தமிழகத்தின் முதல்வராகி, முதல்வரான பின்னரும் மக்களிடையே நடமாடி, அவர்களது இன்பதுன்பங்களில் பங்கேற்ற ஒரே அரசியல் தலைவர் காமராஜர் தான். அவர் மக்களின் நிலையை அறிவதற்காகவும், நெருங்கிப் பழகுவதற்காகவும் தமிழ் நாட்டின் ஒவ்வொரு பகுதிக்கும் சென்றார். மக்களின் பிரச்சனைகளை நேரில் கண்டறிந்து அவற்றிற்கு உரிய தீர்வுகளைக் கண்டார். தனிப்பட்ட தன் நலனைப் பெருக்கிக் கொள்ளாமல், பொது நலனைப் பேணிக்காப்பதில் முனைந்து நின்றார். ஊழலற்ற நிர்வாகத்தை வழங்கினார்.

1954-ம் ஆண்டு காமராஜர் முதன்முறை முதல்வராகப் பொறுப்பேற்ற போது முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் நடைமுறையில் இருந்தது. 1957-ம்

ஆண்டு அவர் இரண்டாவது முறை முதல்வராகப் பொறுப்பேற்றபோது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் கொண்டுவரப்பட்டது. 1962-ம் ஆண்டு அவர் மூன்றாவது முறை முதல்வராகப் பொறுப்பேற்றபோது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் செயல்படத் துவங்கியது.

ஐந்தாண்டுத் திட்டப் பணிகளைத் திறமையுடன் செவ்வனே செயல்படுத்திய காமராஜர் தமிழகத்தை வளர்ச்சிப் பாதையில் அழைத்துச்சென்றார். அதனால் மிகச் சிறப்பாக ஆட்சி செய்யப்படுகின்ற மாநிலம் தமிழ்நாடு எனப் பாரதப் பிரதமர் ஜவகர்லால் நேரு அவர்கள் மனதாரப் பாராட்டினார்.

காமராஜர் நிர்வாகத்தில் தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளுக்கு இடம் அளித்ததே இல்லை. பொதுப்பணம் பொதுமக்களின் நன்மைக்குப் பயன்பட வேண்டுமே தவிர யாரோ சிலரின் நலன்களுக்குப் பயன்பட்டுவிடக் கூடாது என்பதில் உறுதியாக இருந்தார்.

அவர் ஆட்சித்துறை அதிகாரிகளிடம் சுமூகமான உறவினைப் பராமரித்தார். காமராஜரின் எளிமையான,நேரிடையான அணுகுமுறை ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். போன்ற ஆட்சிப்பணி அதிகாரிகளிடத்தில் அவருக்கு நன்மதிப்பைப் பெற்றுத்தந்தது. தன்னுடைய அமைச்சரவை சகாக்கள் அதிகாரிகளிடத்தில் சுமூகமான உறவுமுறையைப் பராமரிக்கத் தவறினால், அந்த அமைச்சர்களை நெறிப்படுத்தவும் அவர் தயங்கியதில்லை.

காமராஜர் மாநில முன்னேற்றத்தை இடைவிடாது கண்காணித்து முன்னெடுத்துச் செல்வதற்காக, “மாநில முன்னேற்றக் குழு” ஒன்றினை ஏற்படுத்தினார். அதில் அனைத்து அமைச்சர்களும், அனைத்துத் துறையின் தலைவர்களும், செயலாளர்களும் இடம் பெற்றிருந்தனர். அக்குழு ஒவ்வொரு மாதமும் கூடி ஒவ்வொரு துறைகளின் திட்டம் சார்ந்த முன்னேற்றம், செயல்பாடுகள் மற்றும் அடைய வேண்டிய இலக்குகள் குறித்தும் ஆராய்ந்தது. இது துறையின் தலைவர்களுக்கும், செயலாளர்களுக்கும் திட்டங்களின் முன்னேற்றம் குறித்தும், தேக்கநிலை குறித்தும் அறிந்து கொள்வதற்கு உதவியாக இருந்தது. இந்த நடைமுறையானது திட்டங்கள் நிறைவேற்றப்படுவதில் காலதாமதத்திற்கு இடமில்லாமல் செய்தது.

இராஜாஜி அவர்கள் கொண்டுவந்த கல்வித்திட்டமே அவர் ராஜினாமா செய்வதற்கும் காமராஜர் முதலமைச்சராகப் பொறுப்பேற்பதற்கும் காரணமாக அமைந்தது. அதனால் காமராஜர் முதல்வராகப் பொறுப்பேற்றதும், இராஜாஜி கொண்டுவந்த அத்திட்டத்தை ரத்து செய்தார். இந்திய அரசியலமைப்பின் வழிகாட்டு நெறிமுறைக் கொள்கைகளில் தெரிவித்துள்ளபடி, 14 வயதிற்குட்பட்ட

குழந்தைகள் அனைவருக்கும் கட்டாய இலவசக் கல்வியை அளிக்க காமராஜர் முடிவு செய்தார். இராஜாஜியின் ஆட்சிக்காலத்தில் பூரண மதுவிலக்கைக் கொண்டு வந்ததால் ஏற்பட்ட வருவாய் இழப்பின் ஒரு பகுதியைச் சரிக்கட்டுவதற்காக மூடப்பட்ட 6000 பள்ளிகளும் மீண்டும் திறக்கப்பட்டன. அதேசமயம் காமராஜர் தமிழகத்தில் பூரண மதுவிலக்கை தொடர்ந்து நடைமுறைப்படுத்தினார். அதன் மூலம் ஏழைக் குடும்பங்கள் இன்னல்படுவதையும், மக்களின் உடல்நலம் பாழாவதையும் தடுத்தார்.

கர்மவீரரான அவர் தமிழகத்தில் கல்வி வளர்ச்சியைக் கொண்டுவருவதற்குக் கடுமையாக உழைத்தார். தமிழகத்தில் இருந்த 15,000 ஆயிரம் கிராமங்களில் 6000 கிராமங்களில் பள்ளிக்கூடங்களே இல்லாத நிலை இருந்தது. அதனால் 500க்கும் அதிகமான மக்கள்தொகை கொண்ட ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பள்ளியைத் திறக்க அவர் உத்தரவிட்டார். அதன்படி 1954-55 ஆண்டுகளில் 12,967 கிராமங்கள் மற்றும் சிறிய நகரங்களில் பள்ளிகள் திறக்கப்பட்டன. கிராமப்புற மாணவர்கள் பயன்பெறும் வகையில் தொடர்ந்து பல பள்ளிகளைத் திறப்பதற்குக் காமராஜரின் அரசாங்கம் பெருமுயற்சிகளை மேற்கொண்டது.

கல்வியை மேலும் பரவலாக்க முடிவு செய்த காமராஜரின் அரசாங்கம் 1962-ம் ஆண்டு 300க்கும் அதிகமான மக்கள் தொகை கொண்ட ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பள்ளியைத் திறக்க முடிவு செய்தது. அதன்படி, மேலும் 12,267 பள்ளிகள் புதிதாகத் திறக்கப்பட்டன.

அதன் விளைவாகப் பள்ளி செல்லும் மாணவர்களின் எண்ணிக்கைப் பெரிதும் உயர்ந்தது. காமராஜர் கண்ட கனவு நனவாகத் துவங்கியது. காமராஜர் ஆட்சி துவங்கிய 8 ஆண்டுகளில் பள்ளி செல்லும் மாணவர்களின் எண்ணிக்கைப் பல மடங்கு உயர்ந்தது.

அதுவரையில் எங்கெல்லாம் பள்ளிகள் திறக்கப்படவில்லையோ, அக்கிராமங்களிலெல்லாம் மத்திய அரசின் நிதியுதவியுடன் ஓராசிரியர் பள்ளிகளை ஏற்படுத்தினார். அதன் மூலம் வேலைவாய்ப்பற்ற படித்த கிராமப்புற இளைஞர்களுக்கு ஆசிரியராகும் வாய்ப்புக் கிடைத்தது. அங்கே கல்வியும் தழைக்கத் துவங்கியது.

ஆரம்பக்கல்வி மட்டுமின்றி மேல்நிலைக் கல்வியை மேம்படுத்தவும் காமராஜர் அரசாங்கம் பாடுபட்டது. அதற்காக அமைக்கப்பட்ட இலட்சுமணசாமி முதலியார் குழுவின் பரிந்துரைகளை ஏற்று, 7 ஆண்டுகள் தொடக்கக் கல்வி, 4 ஆண்டுகள் மேல்நிலைக் கல்வி, உள்ளடக்கிய 11 ஆண்டுகள் பள்ளிக் கல்விமுறை அறிமுகப்படுத்தப்பட்டது. கணிதமும், அறிவியலும், சமூக அறிவியலும் கட்டாயப்

பாடங்களாக்கப்பட்டன. புதிதாகத் திறக்கப்பட்ட பள்ளிகளுக்கு பெருமளவில் ஆசிரியர்கள் தேவைப்பட்டதால், பயிற்றுவிக்கப்பட்ட ஆசிரியர்களை உருவாக்கும் பொருட்டு மாநிலமெங்கும் 40 ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகள் திறக்கப்பட்டன.

எவ்வளவு ஏற்பாடுகள் செய்தாலும் ஏழ்மையில் உழன்றுகொண்டிருந்த ஏதுமற்ற ஏழை மாணவர்களைப் பள்ளிகளுக்கு வரவழைக்க இயலவில்லை. பசியில் வாடும் பாலகர்கள் படிப்பைப் பற்றி நினைக்கக்கூட இயலாதநிலை இருக்கிறது என்பதை உணர்ந்த காமராஜர் நெஞ்சம் பதறினார். ஏழை மாணவர்களின் வாழ்வை எப்படியேனும் உயர்த்தியே தீருவது என்று முடிவு செய்தார். ஏழைக் குழந்தைகளின் பசியினைப் போக்கி அவர்களுக்குக் கல்வியைப் புகட்டுவதற்காக, 1956-ம் ஆண்டு மதிய உணவுத் திட்டத்தை அறிமுகப்படுத்தினார். அதன் மூலம் தமிழகத்தில் மாபெரும் கல்விப் புரட்சிக்கு வித்திட்டார். ஏழை மாணவர்கள் பள்ளிக்கு வருவது பெரிதும் அதிகரித்தது. அனைத்து மாணவர்களும் ஒன்றாக அமர்ந்து உணவருந்தும் சாதிப்பாகுபாடுகளற்ற சமத்துவநிலை பள்ளிகளில் ஏற்பட்டது.

ஓலைக்குடிசைகளையே உறைவிடமாகக் கொண்டிருந்த ஏழை மாணவர்களுக்கு, உணவு தந்து கல்வி கற்க வகை செய்த காமராஜர், அவர்களுக்கு உடையும் கொடுக்க முடிவு செய்தார். 1960-ம் ஆண்டு பள்ளிகளில் சீருடை அறிமுகப்படுத்தப்பட்டு, இலவசமாக வழங்கப்பட்டது. அது மாணவர்களிடையே ஏழை, பணக்காரன் என்ற ஏற்றத்தாழ்வைப் போக்கியது.

காமராஜர் குழந்தைகளுக்கு கல்வி அளிப்பதை ஒரு கடமையாக மட்டும் கருதாமல் அதை ஒரு மக்கள் இயக்கமாக மாற்றியமைத்தார். “அன்னசத்திரம் ஆயிரம் வைத்தல், ஆலயம் பதினாயிரம் நாட்டல்... அன்னயாவினும் புண்ணியம் கோடி ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்” என்ற மகாகவியின் வார்த்தைகளை நிஜமாக்கிக் காட்டுவதற்கான காமராஜரின் சீரிய முயற்சிகளுக்கு ஒட்டுமொத்த தமிழக மக்களும் ஒன்றிணைந்து ஆதரவளித்தனர். மாணவர்களுக்கு மதிய உணவு அளிப்பதிலும், சீருடைகள் வழங்குவதிலும் மக்களும் துணை நின்றனர். இயன்றவர்கள் பலரும் பணமாகவும், பொருளாகவும் வழங்கினர்.

கல்வி வளர்ச்சிக்கென மாவட்டம்தோறும் பள்ளி மேம்பாட்டு மாநாடுகள் நடத்தப்பட்டன. அம்மாநாடுகள் பொதுமக்களின் ஆர்வம் மிகுந்த பங்கேற்புடன் திருவிழாக்களைப் போல் நடந்தன. தமிழகத்தில் மக்கள் இயக்கமாக மலர்ந்த கல்வி வளர்ச்சிக்கு பொதுக் கல்வி இயக்குநராக காமராஜரால் நியமிக்கப்பட்ட நெ.து. சுந்தரவடிவேலுவும் பெரிதும் துணை நின்றார்.

மாணவர்கள் மட்டுமின்றி ஆசிரியர்கள் நலன்காப்பதிலும் காமராஜர் பெரிதும் அக்கறை கொண்டிருந்தார். ஆசியாவிலேயே முதன்முறையாக

ஓய்வூதியம், சேமநலநிதி மற்றும் காப்பீடு ஆகிய மூன்றும் இணைந்த பயன்களை காமராஜரின் அரசாங்கம் ஆசிரியர்களுக்கு வழங்கியது. ஆரம்பப் பள்ளிகளைப் போன்று மேல்நிலைப் பள்ளிகளும் முன்னேற்றம் பெற்றன. 1954-55-ல் 1031 ஆக இருந்த மேல்நிலைப் பள்ளிகளின் எண்ணிக்கை, 1962-63-ல் 1820 ஆக உயர்ந்தது. மேல்நிலைக் கல்வி கற்ற மாணவர்கள் எண்ணிக்கையும் 3.82 இலட்சத்திலிருந்து 6.2 இலட்சமாக உயர்ந்தது.

பள்ளிக்கல்வி மட்டுமின்றி கல்லூரிக் கல்வியை மேம்படுத்துவதிலும் காமராஜர் கவனம் செலுத்தினார். 1953-54 ஆண்டுகளில் 53 கல்லூரிகளும் அவற்றின் பயின்ற 39 ஆயிரம் மாணவர்களுமாக இருந்த நிலை, அடுத்த 9 ஆண்டுகளில் முன்னேற்றம் கண்டு 1962-63 ஆண்டுகளில் கல்லூரிகளின் எண்ணிக்கை 63 ஆகவும் அதில் பயின்ற மாணவர்களின் எண்ணிக்கை 49 ஆயிரமாகவும் அதிகரித்தது. பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் ஆய்வுக் கூடங்களும், நூலகங்களும் துவங்கப்பட்டன. பள்ளி ஆசிரியர்களைப் போலவே கல்லூரி ஆசிரியர்களையும் பாதுகாத்தார் காமராஜர். 1962-ம் ஆண்டிலிருந்து கல்லூரி ஆசிரியர்களுக்கு ஓய்வூதியம் மற்றும் குடும்ப ஓய்வூதியம் வழங்கப்பட்டது.

கல்விக்கு அடுத்தபடியாக காமராஜர் விவசாய மேம்பாட்டில் கவனம் செலுத்தினார். 2007 ஆயிரம் ஏக்கர் பாசன வசதி பெறும் வகையில் 10 கோடி ரூபாய் செலவில் கீழ்பவானி திட்டம் செயல்படுத்தப்பட்டது. மேட்டூர் கால்வாய்த் திட்டமானது சேலம், கோயம்புத்தூர் மாவட்டங்களில் 45 ஆயிரம் ஏக்கர் நிலங்களுக்கு பாசன வசதி அளித்தது. தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களில் 33400 ஏக்கர் நிலங்கள் பாசன வசதி பெறும் வகையில் 29 கோடி ரூபாய் செலவில் காவேரி டெல்டா பாசன மேம்பாட்டுத்திட்டம் செயல்படுத்தப்பட்டது. ஆளியாறு-பரம்பிக்குளம், மணிமுத்தாறு, வைகை, அமாராவதி, சாத்தனூர், கிருஷ்ணகிரி போன்ற நீர்த்தேக்கத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இவை அனைத்தும் முதலாவது ஐந்தாண்டு திட்டக் காலத்தில் செய்து முடிக்கப்பட்டன. இவற்றில் பல பணிகள் திட்டமிட்ட காலத்திற்கு முன்பாகவே நிறைவேற்றி முடிக்கப்பட்டது அவருடைய நிர்வாகத் திறமைக்குச் சான்றாகும்.

புதிய கட்டளை வாய்க்கால், புள்ளம்பாடி வாய்க்கால் மற்றும் வீடூர் அணை போன்றவை இரண்டாவது ஐந்தாண்டு திட்டக் காலத்தில் முடிக்கப்பட்டவை ஆகும். முதல் இரண்டு ஐந்தாண்டு திட்டங்களின் மூலம் தமிழகத்திலிருந்த அனைத்து நதிகளும் அதன் அதிகபட்சப் பயன்பாட்டிற்குக் கொண்டுவரப்பட்டன. ஆகவே, மூன்றாவது ஐந்தாண்டு திட்டக் காலத்தில் காமராஜரின் அரசாங்கம் சிறிய பாசனத் திட்டங்களைச் செயல்படுத்துவதில் கவனம் செலுத்தியது. ஏரிகள், குளங்கள் போன்றவை தூர்வாரப்பட்டு மேம்படுத்தப்பட்டன. 1957-61க்கும் இடைப்பட்ட

காலத்தில் 1600 ஏரிகளும், 1628 குளங்களும் தூர்வாரப்பட்டன. 2000 கிணறுகள் வடிகால் வசதியுடன் ஏற்படுத்தப்பட்டன. விவசாயிகளுக்கு 25 சதவீத அரசு மானியத்துடன் நீண்ட காலக் கடன்கள் வழங்கப்பட்டன.

விவசாய வளர்ச்சியை உறுதிப்படுத்துவதற்காகவும், கிராமப்புறங்களுக்கு மின்சாரம் அளிப்பதற்காகவும் அவர் மின் உற்பத்தித் திட்டங்களுக்கு முன்னுரிமை அளித்தார். பெரியார் நீர் மின் உற்பத்தித் திட்டம், குந்தா நீர் மின் உற்பத்தித் திட்டம் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. விவசாயத்திற்கு மின்சாரம் பயன்படுத்தப்பட்டதன் விளைவாக 23103 கிராமங்கள் மின்சாரம் பெற்றதோடு, விவசாயத்திற்குப் பயன்படுத்தப்பட்ட மின்சார நீரேற்றிகளின் எண்ணிக்கையும் 14 ஆயிரத்திலிருந்து 5,00,000 ஆக உயர்ந்தது. பாசனத் திட்டங்கள் மற்றும் மின் உற்பத்தித் திட்டங்கள் மிக நேர்த்தியாகச் செயல்படுத்தப்பட்டதன் விளைவாக காமராஜரின் ஆட்சிக் காலத்தில் தமிழகம் உணவு தானிய உற்பத்தியில் தன்னிறைவு அடைந்து, மிகை உற்பத்தி கொண்ட மாநிலமாக உயர்ந்தது.

மின் உற்பத்தி செய்வதற்கும் அவற்றைப் பகிர்ந்தளிப்பதற்கும் அரசுக் கட்டுப்பாட்டில் மின்சார வாரியம் உருவாக்கப்பட்டது. விவசாயத்திற்கு மின்சாரத்தைப் பயன்படுத்துவதில் தமிழகம் முதல் மாநிலமாகத் திகழ்ந்தது. விவசாயத்துறையில் மின்சாரத்தின் பயன் 44 கோடி யூனிட்டுகளிலிருந்து, 186 கோடி யூனிட்டுகளாக அதிகரித்தது. நீர் மின் உற்பத்தியில் தமிழகம் இரண்டாவது இடத்தில் இருந்தது. மின்சார உற்பத்தியிலும்இ பயன்பாட்டிலும் தொடர்ந்து முன்னேறி மின்சாரத் தன்னிறைவு பெற்ற மாநிலமாகத் திகழ்ந்தது.

காமராஜரின் 9 ஆண்டுகால ஆட்சியில் தமிழகம் தொழில் துறையில் பெரும் ஏற்றம் கண்டது. அடிப்படையில் தமிழகம் விவசாய பூமியாக இருந்த போதிலும் தொழில்கள் பல தழைத்தோங்குவதற்கான சாத்தியக்கூறுகளும் இருந்தன. அவற்றைச் சரியான முறையில் பயன்படுத்திக் கொண்டார் காமராஜர். தொழிற்சாலைகளின் வளர்ச்சிக்கு முக்கியத்துவம் அளித்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் திட்டங்களைச் சரியாகப் பயன்படுத்திஇ தமிழ் நாட்டின் தொழில் வளரச்சிக்கு வழிகோலினார்.

கிண்டி, விருதுநகர், அம்பத்தூர், இராணிப்பேட்டை போன்ற இடங்களில் தொழிற்பேட்டைகள் ஏற்படுத்தப்பட்டன. அதன் மூலம் சிறுதொழில் வளர்ச்சி ஊக்கப்படுத்தப்பட்டது. காமராஜரின் ஆட்சிக்காலத்தில் தமிழகத்தில் கனரகத் தொழிற்சாலைகள் பல ஏற்படுத்தப்பட்டன. சென்னை, நெய்வேலி, தூத்துக்குடி, சேலம், கோயம்புத்தூர், திருச்சிராப்பள்ளி ஆகிய இடங்களில் தொழிற்சாலை மண்டலங்கள் ஏற்படுத்தப்பட்டன. ஆவடி டாங்க் தொழிற்சாலை, திருச்சி பாரத மிகுமின் நிறுவனம், ஊட்டி புகைப்படச் சுருள் தொழிற்சாலை, சென்னை

ரயில்பெட்டித் தொழிற்சாலை, கல்பாக்கம் அணுமின் நிலையம், கிண்டி தொலைநகல் தொழிற்சாலை, மணலி எண்ணெய் சுத்திகரிப்பு நிலையம் போன்ற கனரகத் தொழிற்சாலைகள் வெளிநாட்டு முதலீட்டுடனும், மத்திய அரசின் உதவியுடனும் தொடங்கப்பட்டன. மேலும், பள்ளிப்பாளையம் சேஷாயி காகித ஆலை, ராஜபாளையம் ராம்கோ தொழிற்சாலை, சங்கரிதுர்க்கம் இந்தியா சிமெண்ட ஆலை, வண்டலூர் ஸ்டண்டர்டு மோட்டர் தொழிற்சாலை, எண்ணூர் ராயல் என்பீல்டு மோட்டார் தொழிற்சாலை, வடபாதி மங்கலம் சர்க்கரை ஆலை மற்றும் அசோக் லேலண்டு தொழிற்சாலை ஆகிய தனியார் துறை தொழிற்சாலைகளும் தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சியைத் துரிதப்படுத்தின.

கனரகத் தொழிற்சாலைகளைப் போலவே, கார்கள், டிராக்டர்கள், இரு சக்கர வாகனங்கள், டீசல் எஞ்ஜின்கள் போன்றவற்றைத் தயாரிக்கும் தொழிற்சாலைகளும், மின்சார நீரேற்றிகள், மின் மீட்டர்கள், மின் கலங்கள் போன்றவற்றைத் தயாரிக்கும் சிறு தொழிற்சாலைகளும் வளர்ச்சி அடைந்தன. 9 ஆண்டுக் காலத்தில் தமிழ் நாட்டில் இருந்த தொழிற்சாலைகளின் எண்ணிக்கை 4500–ஐ தொட்டது. தொழில் வளர்ச்சியில் மகாராஷ்டிராவிற்கும் , மேற்கு வங்காளத்திற்கும் அடுத்த நிலையில் இருந்த தமிழகம் மேற்கு வங்காளத்தைப் பின்னுக்குத் தள்ளி இரண்டாவது இடத்திற்கு முன்னேறியது.

காமராஜரின் ஆட்சிக்காலத்தில் சென்னை இராமானுஜம் கணித நிலையம், சென்னை இந்திய தொழில் நுட்ப நிலையம் (ஐ.ஐ.டி),அடையாறு புற்று நோய் ஆராய்ச்சி நிறுவனம், திருச்சி மண்டல தொழில் நுட்பக் கல்லூரி, கோவை அரசு பொஷீயியல் கல்லூரி, காரைக்குடி மின்–வேதியியல் ஆய்வு நிலையம், சென்னை அழகப்பா தொழில் நுட்பக் கல்லூரி போன்ற அறிவியல், தொழில் நுட்ப மற்றும் ஆராய்ச்சி நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டன. அதுதவிர பல பாலிடெக்னிக் கல்லூரிகளும், தொழில் பயிற்சி நிறுவனங்களும் (ஐ.டி.ஐ.) துவக்கப்பட்டன. தனியார் துறையிலும் பல அறிவியல், தொழில் நுட்பக் கல்லூரிகள் ஆரம்பிக்கப்பட்டன.

காமராஜர் ஒரு இலட்சியவாதி மட்டுமல்ல அவர் ஒரு செயல் வீரரும் ஆவார். இந்திய தேசம் பருவ மழைகளையும், விவசாயப் பொருளாதாரத்தையும் சார்ந்தே இருக்கிறது என்பதை நன்கு உணர்ந்திருந்த அவர் விவசாயத்தை மேம்படுத்துவதிலும், அதன் மூலம் விவசாயிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதிலும் தீவிர கவனம் செலுத்தினார்.

விவசாய முன்னேற்றத்தில், விவசாயத்தொழிலாளர்களின் பங்கு முக்கியமானது என்பதை உணர்ந்த காமராஜரின் அரசாங்கம், 1956–ம் ஆண்டு விவசாயக் குத்தகைதாரர்கள் சட்டத்தைக் கொண்டு வந்தது. அச்சட்டம் உழுபவரின்

உரிமைகளை உறுதிப்படுத்தியது. 1962-ம் ஆண்டு கொண்டு வரப்பட்ட நில உட்சவரம்புச் சட்டத்தின் படி விவசாய நிலத்திற்கான உட்சவரம்பு நிர்ணயிக்கப் பட்டது. அச்சட்டம் அதிகப்படியான நிலம் வைத்திருந்த நிலச்சுவான்தார்களிடமிருந்து உட்சவரம்பிற்கு மேற்பட்ட நிலத்தை எடுத்து, அதை நிலமற்ற ஏழை விவசாயிகளுக்குப் பகிர்ந்தளிப்பதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரம் அளித்தது.

காமராஜரின் ஆட்சியில் வீட்டுவசதியும், நகர்ப்புற வளர்ச்சியும் வேகம் பெற்றன. அரசு ஊழியர்களுக்கும், காவல் துறையினருக்கும், நெசவாளர்களுக்கும் வீட்டுவசதிகள் செய்து தரப்பட்டன.

காந்தியடிகளின் கொள்கை வழி நின்றவரான கர்மவீரர் கிராமப் பஞ்சாயத்து வளர்ச்சியிலும், சமூக முன்னேற்றத் திட்டங்களிலும் கவனம் செலுத்தினார். 1960-ம் ஆண்டு காந்தி ஜெயந்தி விழாவின் போது தமிழ் நாட்டில் புதிய கிராமப் பஞ்சாயத்துக்களும், பஞ்சாயத்து ஒன்றியங்களும், மாவட்ட வளர்ச்சி மன்றங்களும் துவக்கப்பட்டன. உள்ளாட்சி நிறுவனங்களுக்கு அதிகாரங்களும், நிதி ஆதாரமும், உள்கட்டுமான வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டன. உள்ளாட்சி அமைப்புகள் மூலமாக சமூக நலத்திட்டங்கள் செயல்படுத்தப்பட்டன. தழ்த்தப்பட்ட நிலையில் இருந்த எஸ்.சி.இ எஸ்.டி. மக்களுக்குக்கென்று சிறப்பு சமூக நலத்திட்டங்கள் ஏற்படுத்தப்பட்டன. பெண்களின் நலனைப் பாதுகாப்பதற்கும், பெண் தொழிலாளர்களின் நிலையினை உயர்த்துவதற்கும் திட்டங்கள் செயல்படுத்தப்பட்டன. புதிய பஞ்சாயத்து ஆட்சி முறை காமராஜர் கொண்டு வந்த அமைதிப் புரட்சியாகும்.

தேசத்தின் வளர்ச்சிக்கு மக்கள் தொகைப் பெருக்கம் ஒரு பெருந்தடையாக இருப்பதை உணர்ந்த காமராஜரின் அரசாங்கம், குடும்ப கட்டுப்பாட்டுத் திட்டத்தை செயல்படுத்துவதற்காக, அத்திட்டத்தை மத்திய அரசு அறிவிப்பதற்கு முன்பாகவே ஒரு வாரியத்தை உருவாக்கியது.

எல்லாவற்றிக்கும் மேலாகத் தமிழ் மொழியின் வளர்ச்சிக்குக் காமராஜர் மேற்கொண்ட நடவடிக்கைகள் மிகவும் குறிப்பிடத்தக்கவை. ஆனால், ஒரு போதும் தான் தமிழ் மொழியை வாழ வைத்ததாக அவர் தம்பட்டம் அடித்துக் கொண்டதில்லை. 1955-ம் ஆண்டு தமிழக சட்டப்பேரவையில் தாக்கல் செய்யப்பட்ட நிதிநிலை அறிக்கை தமிழ் மொழியில் அச்சிடப்பட்டது. 1958-ம் ஆண்டு தமிழ் ஆய்வுக் குழுவினை நிறுவியது தமிழ் வளர்ச்சிக்குக் காமராஜர் செய்த மாபெரும் சாதனையாகும். அலுவல் மொழிச் சட்டத்தின் மூலம் தமிழ் ஆட்சி மொழியாக்கப் பட்டதைச் செயல்படுத்தவும், தமிழின் பயன்பாட்டை அதிகப்படுத்தவும் அக்குழு ஏற்படுத்தப்பட்டது. 14 ஜனவரி 1958-ம் ஆண்டு முதற்கொண்டு தமிழக அரசு அலுவலகங்களில் தமிழ் தட்டச்சு இயந்திரம்

பயன்பாட்டிற்கு கொண்டுவரப்பட்டது. அதே நாளில் தமிழ் மொழி தமிழகத்தின் ஆட்சி மொழியாகவும் அறிவிக்கப்பட்டது. அதேசமயம், தேசிய ஒருமைப்பாட்டை உறுதி செய்வதற்காக காமராஜரின் அரசாங்கம் மும்மொழிக் கொள்கையினை ஏற்றுக் கொண்டது. 1961-ம் ஆண்டு காமராஜர் ஆட்சியில் தான் தமிழ் மொழி கல்லூரிகளில் பயிற்று மொழியாக்கப்பட்டது. 1962-ம் ஆண்டு தமிழ் அகாடமி தனது முதல் தமிழ் கலைக்களஞ்சியத் தொகுதியை வெளியிட்டது.

1962-ம் ஆண்டு நடந்த தேர்தலில் காமராஜரின் தலைமையின் கீழ் ஆட்சி அமைப்பதற்குத் தேவையான பலத்தைக் காங்கிரஸ் பெற்றிருந்த போதிலும் கூட, முந்தைய தேர்தலில் 15 இடங்களே பெற்ற தி.மு.க. இத்தேர்தலில் 50 இடங்களைப் பெற்று அங்கீகரிக்கப்பட்ட எதிர்க்கட்சியாக உருவெடுத்தது. காங்கிரஸ் கட்சியின் வீழ்ச்சியைத் தடுத்து நிறுத்துவதற்காக, தான் மூன்றாவது முறையாக முதலமைச்சராகப் பொறுப்பேற்று ஒன்றரை ஆண்டுகளுக்குப் பிறகு அப்பதவியை இராஜினாமா செய்ய காமராஜர் முடிவெடுத்தார். முதலமைச்சர் பதவியைத் துறந்து கட்சிப் பணிக்காக டெல்லி சென்ற காமராஜரை, பண்டித நேரு அவர்கள் அகில இந்தியக் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கச் செய்தார். தேசிய அரசியலிலும் தன் தனி முத்திரையைப் பதித்த காமராஜர் அசைக்கவியலாத "கிங் மேக்கர்" ஆகத் திகழ்ந்தார்.

கடைக்கோடித் தமிழனும் கரம் கூப்பித் தொழுத கர்மவீரராக, அப்பழுக்கற்ற அரசியல் தலைவராக, தேசத்தின் முன்னேற்றமே தன் வாழ்வாகக் கொண்ட தீயாக சீலராகக் காமராஜர் திகழ்ந்தார். "ஏழைகளின் துன்பம் போக்காமல் எந்தப் பதவியிலும் இருப்பதில் எவ்விதப் பயனுமில்லை" என்பதைத் தன் கொள்கையாகக் கொண்டிருந்த காமராஜர் உண்மையிலேயே ஒரு ஏழைப் பங்காளனாகத் தமிழக மக்களின் மனங்களில் நீங்காது நிறைந்தார்.



# கக்கன்: அரசியல் நேர்மையின் அடையாளச் சின்னம்

முனைவர் **நா. சேதுராமன்**

கக்கன் – எளிமை என்ற வார்த்தையின் மறுபெயர். அரசியல் வானில் ஒரு அபூர்வ நட்சத்திரம். முந்தைய தலைமுறை மறந்துவிட்ட, இன்றைய தலைமுறை அறிந்து கொள்ளாத ஒரு அதிசய மனிதர். அரசியல் நேர்மையின் அடையாளச் சின்னமாகத் திகழ்ந்த அந்த மாமனிதரின் வாழ்க்கையும், அவரின் நேர்மைத்துணிவும் இன்றைய இளைய தலைமுறை அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும்.

அவர், மதுரை மாவட்டம், மேலூர் வட்டத்தில் உள்ள தும்பைப்பட்டி என்ற கிராமத்தில், 18 ஜீன் 1909-ம் ஆண்டு, ஒரு எளிய விவசாயியான பூசாரி கக்கனுக்கும், பெரம்பியம்மாளுக்கும் மகனாகப் பிறந்தார். கக்கனுடைய தந்தையார் அவ்வூர் வீரகாளியம்மன் கோயில் பூசாரியாகவும், ஊர்க் காவலராகவும் இருந்து வந்தார். கக்கன் சிறு வயதிலேயே தன்னுடைய தாயை இழந்து, சிற்றன்னையின் அரவணைப்பிலேயே வளர்ந்தார்.

தொடக்கக்கல்வியை தும்பைப்பட்டியில் உள்ள ஆரம்பப்பள்ளியில் கற்ற கக்கன், தொடர்ந்து மேலூரில் உள்ள அரசு உயர்நிலைப் பள்ளியிலும், பி.கே.என். நாடர் உயர்நிலைப் பள்ளியிலும் படித்தார். பின்னர் பசுமலையில் உள்ள ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்து பயின்றார். படிக்கின்ற காலத்திலேயே பணிசெய்யத் தயங்காத அவர், அருகிலுள்ள தொழிற்சாலைகளுக்குச் சென்று உழைத்தார். குடும்பத்திற்குச் சுமையாக இல்லாமல், அந்த வருமானத்தைத் தன் படிப்புச் செலவிற்குப் பயன்படுத்திக் கொண்டார்.

கக்கன் தனது இளவயதிலேயே சுதந்திர போராட்டத்தில் ஈடுபடலானார். பள்ளி மாணவப் பருவத்திலேயே காங்கிரஸ் இயக்கத்தில் தன்னை இணைத்து கொண்டார். தான் கற்றது மட்டுமல்லாமல், அனைவரும் அச்செல்வத்தைப் பெறவேண்டும் என்ற எண்ணம் கொண்டிருந்த அவர், தும்பைப்பட்டியைச் சுற்றியுள்ள கிராமங்களில் இரவுப் பள்ளிகளை நடத்தி ஏழை மாணவர்களுக்கு எழுத்தறிவித்தார். அரிக்கேன் விளக்கின் துணையோடு அவர் செய்த இப்பணி அனைவராலும் பாராட்டப்பட்டது.

பொதுப்பணியில் ஈடுபடத்துவங்கிய அவருக்கு, சசிவர்ணத்தேவர், வைத்தியநாத ஐயர் ஆகியோரின் நட்புக் கிடைத்தது. காந்தியக் கொள்கைகளை

ஏற்று காந்திய வழியில் நடைபோடத் தொடங்கினார். குடும்ப சூழ்நிலை உணர்ந்து நடக்கும் பிள்ளையாக இருந்த கக்கன், குடும்பத்திற்காகத் தன் கொள்கையை விட்டுத்தரவில்லை. சாதி, சமய மறுப்பில் உறுதியாக இருந்த அவர், தன்னுடைய பெற்றோரின் விருப்பத்திற்கு மாறாக சுவர்ணம்பார்வதி என்ற கிருஸ்துவப் பெண்ணை மணந்து கொண்டார்.

6 செப்டம்பர் 1938 அன்று நடைபெற்ற அப்பதிவுத் திருமணத்தை சசிவர்ணத்தேவர் முன்னின்று நடத்தி வைத்தார். கக்கன் தம்பதியினர் ஐந்து புதல்வர்களையும், ஒரு புதல்வியையும் பெறும் பேறு பெற்றனர்.

ஜாதிப்பாகுபாடுகள் அறவே ஒழிய வேண்டும் என விரும்பிய அவர், அதே போன்ற எண்ணம் கொண்டு தாழ்த்தப்பட்ட மக்களின் உயர்விற்காகப் பாடுபட்டுவந்த காந்தியவாதியான வைத்தியநாத ஐயரால், தமிழ்நாடு ஹரிஜன சேவசங்கத் தலைவராக நியமனம் செய்யப்பட்டார்.

அன்றைய காலகட்டத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் மற்றும் சாணார்கள் கோயில்களுக்குள் நுழைய இயலாத நிலை இருந்தது. இராஜாஜி அரசு 1939-ம் ஆண்டு, கோயில் உள்நுழைவு அதிகாரம் மற்றும் உரிமைச் சட்டம் என்ற சட்டத்தினை கொண்டு வந்ததின் விளைவாக தலித்துக்கள் மற்றும் சாணார்கள் கோயில்களில் நுழைய வழி ஏற்பட்டது. மதுரையில் வைத்தியநாத ஐயரோடு இணைந்து கக்கன் தலித்துக்கள் மற்றும் சாணர்களுக்குத் தலைமைத் தாங்கி மதுரை மீனாட்சியம்மன் ஆலயத்தில் ஆலயப்பிரவேசம் செய்தார்.

ஆனால், 1945-ம் ஆண்டு மதுரையில் நடைபெற்ற ஹரிஜன மாநாடு ஒன்றில், ஹரிஜன் ஒருவரை அமைச்சராக நியமிக்க வேண்டும் என்ற தீர்மானம் வந்தபோது, அதைக் கக்கன் மிகக் கடுமையாக எதிர்த்தார். சாதி அடிப்படையில் பதவி கோருவது முறையான செயல் அல்ல என்றார்.

தான் படிகின்ற காலத்தில் பள்ளித் திண்ணையிலும், பின்னர் விடுதியிலும் தங்கிப் படித்த கக்கன், ஏழை மாணவர்கள் பயன் பெறுவதற்காக மதுரையில் தொடங்கப்பட்ட காந்திஜி மாணவர் இல்ல விடுதிக்கும், கஸ்தூரிபாய் பெண்கள் இல்ல விடுதிக்கும் காப்பாளராக இருந்து வந்தார்.

மகாத்மாவின் கொள்கைகளை ஏற்று, அவர் தன்னுடைய தும்பைப்பட்டி கிராமத்தில் கள்ளுக்கடை மறியலிலும் ஈடுபட்டார். அவ்வூரில் இருந்த பொதுக்கிணற்றை சாதி, மதப் பாகுபாடின்றி அனைவரும் பயன்படுத்த வழிகோலினார்.

மேலூர் வட்டார காங்கிரஸ் போர்டு உறுப்பினராக ஆன அவருக்கு, காமராஜரின் அறிமுகம் கிடைத்தது. காங்கிரஸ் இயக்கத்தில் கக்கன் கொண்டிருந்த ஈடுபாட்டினைக் கண்டு, காமராஜர் அவருக்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்தார். கக்கன் அவர்கள் காங்கிரஸ் பொதுக்கூட்டங்களில் கலந்து கொண்டு பேசலானார். "செய் அல்லது செத்து மடி" என்று முழங்கி அண்ணல் காந்தி அவர்கள் "வெள்ளையனே வெளியேறு" இயக்கத்தைத் 1942-ம் ஆண்டு தொடங்கிய போது, கக்கன் அவர்கள் அவர்கள் அவ்வியக்கத்தை மேலூர் தாலுகாவில் முன்னின்று நடத்தினார். அதன் விளைவாக, சிறைத்தண்டனை பெற்று அலிப்பூர் சிறையில் அடைக்கப்பட்டார். தேச விடுதலைப் போராட்டத்தில் முன்னின்ற அவர் பலமுறை சிறை சென்றார்.

1946-ம் ஆண்டு பண்டித ஜவகர்லால் நேருவின் தலைமையில் இடைக்கால அரசாங்கம் அமைந்த போது, நடந்த தொகுதிப் பேரவைத் தேர்தலில் வெற்றிபெற்று 1946 முதல் 1950 வரை உறுப்பினராகப் பொறுப்பு வகித்தார். இந்திய அரசியல் நிர்ணய சபையிலும் இடம் பெற்றார். சுதந்திர இந்தியாவில் நாடாளுமன்றத்தின் மக்களவை உறுப்பினராக 1952 முதல் 1957 வரை பொறுப்பு வகித்தார்.

தேசத்தின் முன்னேற்றத்தில் ஆர்வம் கொண்ட கக்கனுடைய செயல்பாடுகளைக் கண்ட காமராஜர், தமிழகத்தின் முதல்வர் பொறுப்பை ஏற்கும் பொருட்டு தான் வகித்து வந்த தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் பதவியை விட்டு விலகியபோது, கக்கன் அவர்களை அப்பதவியில் அமர்த்திப் பெருமிதம் அடைந்தார். அதே ஆண்டு அவருடைய தலைமையில் ஆவடி காங்கிரஸ் மாநாடு வெகு சிறப்பாக நடைபெற்றது.

1957-ம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தலில், மேலூர் தனித்திகுதியில் போட்டியிட்டு வெற்றி பெற்ற கக்கன், காமராஜருடைய அமைச்சரவையில் பொதுப்பணி, ஆதிதிராவிடர் நலம், விவசாயம் மற்றும் உணவுத்துறை அமைச்சராகப் பொறுப்பேற்றார். மக்களோடு மக்களாகக் கலந்து பழகிய அவர், தன் தொகுதிக்கு தேவையான அனைத்து அடிப்படை வசதிகளையும் ஏற்படுத்தித் தந்தார்.

1962-ம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தலில் சமயநல்லூர் தொகுதியில் போட்டியிட்டு வென்ற அவர், காமராஜரின் அமைச்சரவையில், விவசாயம், நீர்பாசனம், வனம் மற்றும் ஆதிதிராவிடர் நலத்துறை அமைச்சராகப் பெறுப்பு வகித்தார். பின்னர் காவல் துறை அமைச்சராகவும் பொறுப்பேற்றார். பக்தவச்சலம் அவர்களின் அமைச்சரவையிலும் தொடர்ந்து பணியாற்றினார்.

மேட்டூர், வைகை, ஆரணியாறு, சாத்தனூர், மணிமுத்தாறு, அமராவதி, கிருஷ்ணகிரி, ஆளியாறு போன்ற அணைகள் காமராஜரின் ஆட்சிக் காலத்தில் கட்டப்பட்டவை என்றால், பொதுப்பணித்துறை அமைச்சராக இருந்து அப்பணிகளைச் செவ்வனே செய்து முடித்தவர் கக்கன் ஆவார். ஆதிதிராவிடர் நலத்துறை அமைச்சராக அம்மக்களின் முன்னேற்றத்திற்கென பல நலத்திட்டங்களைக் கொண்டுவந்ததோடு, ஆதிதிராவிட மக்களின் கல்வி வளர்ச்சிக்குப் பெரிதும் பாடுபட்டார். விவசாய அமைச்சராக இரண்டு விவசாயப் பல்கலைக்கழகங்களை ஏற்படுத்தினார்.

இன்றைய காலகட்டத்தில், பதவியிலே, பொறுப்பிலே இருப்பவர்கள் சட்டம் நமக்கல்ல எனக் கருதிச் சட்ட மீறல்களில் அப்பட்டமாக ஈடுபடுவதைப் பார்க்க முடிகிறது. ஆனால் காவல்துறை அமைச்சராக இருந்த கக்கன் சட்ட விதிகளை மதிப்பதற்கு தானே முன்னுதாரணமாக விளங்கினார். ஒருமுறை அவர் சென்னை சூளைமேட்டில் சவரத் தொழிலாளர்களுடைய விழா ஒன்றில் கலந்து கொண்டு பேசிக் கொண்டிருந்தார். மணி இரவு 10 ஆனது. உடனே ஒலிப்பெருக்கியை நிறுத்தச் செய்த அவர், மக்களைத் தன்னருகே அழைத்து தனது பேச்சைத் தொடர்ந்தார். அதைப் போலவே இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபட்ட தன் மகனையும் கைது செய்ய உத்தரவிடுவதற்கு அவர் சிறிதும் தயங்கவில்லை.

அவருடைய சகோதரர் விஸ்வநாதன் வங்கிப் பணி பெறுவதற்கு சிபாரிசு செய்யுமாறு கேட்டபோது, அதைச் செய்வதற்கு அவர் திட்டவட்டமாக மறுத்து விட்டார். அதனால் சகோதரர்களுக்குள் வருத்தம் ஏற்பட்டது. ஆயினும் தன் பதவியைச் சுயநலத்திற்காகப் பயன்படுத்த அவர் தயாராக இல்லை.

அதேபோல், நம்முடைய சாதிக்காரர் அமைச்சராக இருக்கிறார், அவர் மூலமாகக் காரியங்கள் சாதித்துக் கொள்ளலாம் என எண்ணியவர்களின் எண்ணங்களும் ஒருபோதும் ஈடேறியதில்லை. அவர் அதற்கெல்லாம் அப்பாற்பட்டவராக இருந்தார். சொந்த நலனுக்காகவோ, சொந்த பந்தங்களின் நலனுக்காகவே, விதிமுறைகளையும், சட்ட திட்டங்களையும் வளைக்க அவர் ஒரு போதும் தயாராக இருந்ததில்லை. எது சரியோ, எது நியாயமானதோ, எது சட்டப்படி நடைபெற வேண்டியதோ, அது நடைபெறுவதற்கு அவர் உறுதுணையாய் இருந்தார்.

இன்று அரசு வாகனத்தை சொந்தப் பணிகளுக்குப் பயன்படுத்துகின்ற பலரைப் பார்க்கிறோம். ஆனால், பதவிகள் பல வகித்த போதும், அதிகாரம் மிக்க அமைச்சராய் இருந்த போதும் மிக எளிமையாக வாழ்ந்த கக்கன், தன் வாழ் நாள் முழுமையும், மக்களோடு மக்களாக பேருந்திலேயே பயணம் செய்தார்.

கக்கன் அவர்கள் பொதுப்பணித்துறை அமைச்சராக இருந்தபோது, இரஷ்யாவில் இருந்து வந்திருந்த பொறியியல் வல்லுநர்கள், கக்கனுடைய பணிகளைப் பெரிதும் பாராட்டி ஒரு தங்கப் பேனாவினைப் பரிசளித்தனர். அதை அன்போடு பெற்றுக்கொண்ட அவர் அதிகாரிகளை அழைத்து, அதை உடனடியாக அரசுக் கருவூலத்தில் சேர்த்துவிட ஆணையிட்டார். 'எவ்வித அரசு சொத்தையும் நான் சொந்தம் கொண்டாட மாட்டேன்' என்பதில் உறுதியாக இருந்தார்.

தூய உள்ளம் கொண்ட கக்கன், 1967-ம் ஆண்டு நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில் மேலூர் (தெற்கு) தொகுதியில் போட்டியிட்டு அவரை எதிர்த்துப் போட்டியிட்ட தி.மு.க. வேட்பாளர் ஒ.பி. ராமனிடம் தோற்றார். அரசியல் சதுரங்கத்தில் நேர்மையும், எளிமையும் தோற்றுப் போனது. பின்னர் காமராஜரின் மரணத்திற்குப் பிறகு பெரிதும் மனம் உடைந்த அவர் அரசியலிலிருந்து விலகினார். பொதுப்பணிகளில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டார்.

எம்.ஜி. ராமச்சந்திரன் அவர்கள் தமிழக முதல்வராக இருந்தபோது, சென்னை அரசு மருத்துவமனையைப் பார்வையிடச் சென்றார், அப்போது அங்கு தரையில் உடல் நலம் சரியில்லாமல் படுத்திருந்த ஒருவரைப் பார்த்து அதிர்ந்தார். அவர் பார்த்தது வேறு யாரையுமல்ல, பத்தாண்டுகளுக்கும் மேலாக தமிழகத்தின் அமைச்சராகப் பதவி வகித்த கக்கன் அவர்களைத்தான். உடனடியாக அவருக்கு நல்ல சிகிச்சை அளிக்க உத்தரவிட்டார் எம்.ஜி.ஆர்.

அரசியல் நேர்மையின் அடையாளச் சின்னமாகத் திகழ்ந்த கக்கன், 23 டிசம்பர் 1981 அன்று இப்பூவுலகை விட்டு மறைந்தார். அவர் கதராடை உடுத்தி மிகவும் எளிய வாழ்க்கை வாழ்ந்தார். தனக்கென எதையும் நாடியதில்லை. தேசத்தின் நலனே தன் நலன் எனக் கருதினார். "இப்படி ஒரு மனிதர் வாழ்ந்தாரென்று இனிவரும் தலைமுறை நம்பாது" என அண்ணல் காந்தி குறித்து அறிவியல் அறிஞர் ஐன்ஸ்டீன் கூறிய வார்த்தைகள், தீயகசீலர் கக்கனுக்கும் அப்படியே பொருந்தும். இப்படிப்பட்ட தலைவர்கள் இனியும் வருவாரோ... உண்மையிலேயே ஏங்கத்தான் செய்கிறது மனசு.



# வேண்டும் பூரண மதுவிலக்கு

முனைவர் **நா. சேதுராமன்**

இன்றைய நிலையில் உள்நாட்டிலும், வெளிநாடுகளிலிருந்தும் எண்ணற்ற சவால்களை இந்த தேசம் எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால் அவை அனைத்திற்கும் மேலாக, உள்ளிருந்தே உயிர்குடிக்கும் புற்று நோய் போல், இந்த தேசத்தின் மனிதவளத்தை, பொருளாதாரத்தை, சமுதாயத்தை, கலாச்சாரத்தை, மொத்தத்தில் இந்த தேசத்தை மெல்ல மெல்ல மாய்த்துக் கொண்டிருக்கும் ஒன்று உண்டெனில், அது. மது.

கொலை, கொள்ளை, கற்பழிப்பு என் இன்னும் எத்தனை எத்தனை சமூகத் தீமைகள் உண்டோ, அவை அனைத்திற்கும் ஏதோ ஒருவகையில் அடிப்படைக் காரணமாக அமைகிறது மதுப் பழக்கம்.

மதுப்பழக்கத்தின் காரணமாக எண்ணற்ற ஏழைக் குடும்பங்கள் வீதிக்கு வந்துவிட்டன. குடும்பத்தலைவர் குடிகாரராக இருந்துவிட்டால், அதனால் அக்குடும்பம் அனுபவிக்கும் இன்னல்கள் கொஞ்ச நஞ்சமல்ல! அக்குடும்பத்தின் அன்றாட வாழ்க்கை அல்லல் நிறைந்ததாகிவிடுகிறது. குடும்பத்தின் கௌரவம் ஓட்டைவிழுந்த கப்பலின் நிலைக்கு ஒப்பானதாகி விடுகின்றது.

மகளின் திருமணத்திற்காக மனைவி அடுத்தவர்களிடம் கடன் வாங்கி வைத்திருந்த பணத்தை குடித்துத் தொலைத்துவிட்டு வந்த; மகனின் தேர்வுக்குப் பணம் கட்டுவதற்காக மண் சுமந்து மனைவி சேர்த்துவைத்த பணத்தை திருடிக் குடித்துவிட்டுவந்த அப்பாக்களைப் பற்றியெல்லாம் கேள்விப்படும் பொழுது, நெஞ்சில் வேதனை நிறைகிறது. “நெஞ்சு பொறுக்குதில்லையே! இந்த நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்!” என்ற மகாகவியின் வரிகள் ஞாபகத்திற்கு வருகின்றன.

அயல்நாடு சென்றாலும், மதுவையும், மாமிசத்தையும் தொடமாட்டேன் என்று, தன் அன்னைக்குச் சத்தியம் செய்து கொடுத்த அண்ணலின் தேசம், இன்று “மது அரக்கனுக்கு” தன் மடியிலேயே இடம் கொடுத்திருப்பது வெட்கப்படவேண்டிய விஷயமாகும்.

பூரண மதுவிலக்கு கொண்டுவந்தால், அரசுக்கு வருமானம் குறைந்துவிடும் என்ற ஒரு கருத்து பலராலும் முன்வைக்கப்படுகிறது. ஆனால், சிந்திக்க வேண்டிய விஷயம் யாதெனில், மதுவிற்பனை மூலமாக அரசுக்கு சில நூறு கோடிகள் வரி வருமானம் கிடைக்கிறது. அது எவ்வாறு கிடைக்கிறது? அன்றாடங் காய்ச்சிகளாக இருக்கும் ஏழை, எளிய மக்கள் பல்லாயிரம் கோடி ரூபாய்களுக்கு மது வாங்கிக்

குடிப்பதால் தானே கிடைக்கிறது. ஆக, அரசாங்கத்தைவிட, மக்களல்லவா பெரிதும் நஷ்டமடைந்து கொண்டிருக்கின்றார்கள். மக்களின் பணம் தேவையில்லாமல் வீணாகிக் கொண்டிருக்கிறதே! இதைத் தடுக்க வேண்டியது ஒரு மக்கள் நல அரசாங்கத்தின் கடமை அல்லவா!

அரசாங்கம் மட்டுமல்ல, மக்களும் மாற்றத்திற்கு தயாராக வேண்டும். சிலர் சொல்லுவார்கள் "இந்தக் காலத்துல யார் தான் குடிக்கல! எல்லாருந்தான் குடிக்கிறான். அதெல்லாம் மாத்த முடியாதுப்பா!" என்று. ஆனால் உண்மை அதுவல்ல! மொத்த மக்கள் தொகையில் சுமார் 20 சதவீதம் பேர் மட்டுமே குடிகாரர்களாக இருக்கிறார்கள். அனைவரும் குடிக்கிறார்கள் என்பது அப்பட்டமான பொய். ஆனால் அந்த 20 சதவீதம் பேரால், மீதமிருக்கும் 80 சதவீதம் பேரும்இ ஏன்? ஒட்டு மொத்த சமுதாயமே பாதிப்பிற்குள்ளாகிறது.

இன்னும் சிலர், நான் மூட்டை தூக்கிப் பிழைக்கிறேன்! நான் பாரவண்டி இழுக்கிறேன்! நான் நாள் முழுவதும் ஓயாமல் உழைக்கிறேன்! எனக்கு உடம்பு வலிக்கிறது. அதற்காகத் தான் குடிக்கிறேன் என்கிறார்கள். எவ்வளவு அபத்தமான காரணம். அவ்வாறு கூறுபவரின் மனைவியும் வேலைக்கு போகிறாரே! இவராவது வேலைக்குப் போய் வந்து படுத்துக் கொள்வார். ஆனால், அப்பெண்மணி வேலைக்கு சென்று வந்ததோடல்லாமல், சமையல் செய்வது, துணி துவைப்பது, குழந்தைகளை கவனிப்பது என குடும்பத்தின் அத்தனை வேலைகளையும் அலுக்காமல் செய்தாக வேண்டும். இந்நிலையில் அப்பெண்மணியும் உடல் வலிக்கிறது என்று கூறி மது குடிக்கத் துவங்கி விட்டால், குடும்பம் என்னாவது? இந்த தேசம் என்னாவது? ஆக குடிப்பழக்கத்திற்கு ஆளானவர்கள் இதுபோல போலிக் காரணங்களைக் கூறிக் கொண்டிராமல், மதுவிற்கு முற்றிலும் விடை கொடுக்கத் தயாராக வேண்டும்.

மூதறிஞர் ராஜாஜியின் ஆட்சிக் காலத்திலும், பெருந்தலைவர் காமராஜரின் பொற்கால ஆட்சியிலும் தமிழகத்தில் பூரண மதுவிலக்கு இருந்ததே! அறிஞர் அண்ணா அவர்களும் அக்கொள்கையிலிருந்து மாறவில்லையே! அப்போது இந்தியாவின் பிரதமராக இருந்த மொரார்ஜி தேசாய் அவர்கள், மதுவிலக்கினால் மாநிலங்கள் அடையும் நஷ்டத்தில் பாதி தொகை கொடுக்க முன்வந்ததால் எம்.ஜி.ஆர் அவர்களும் சில ஆண்டுகள் மதுவிலக்கை அமல்படுத்தினாரே! அப்போதெல்லாம் மதுவிலிருந்து வருமானம் வரவில்லையே! ஆனாலும், அரசு நிர்வாகம் சிறப்பாகத்தானே நடைபெற்றது.

ஆகவே, காமராஜர் ஆட்சிக் காலத்தில் இருந்ததைப் போன்ற பூரண மதுவிலக்கே இந்த தேசத்தின் முக்கியத் தேவையாக இருக்கிறது. ஆம்! உண்மையிலேயே, வீடும் நாடும் முன்னேற வேண்டுமெனில், "வேண்டும் பூரண மதுவிலக்கு".

◆◆◆

